# மருத்துவமும் சோதிடமும்

## (தமிழர் வாழ்வில் சித்த மருத்துவம்)




Dr. சே. சிவசண்முகராஜா *M.D.(S)*

# மருத்துவமும் சோதிடமும்

(தமிழர் வாழ்வில் சித்த மருத்துவம்)

சித்த மருத்துவ கலாநிதி சே.சிவசண்முகராஜா
B.S. M.S. (1st Class Hons ) (Sri Lanka). M.D.(Siddha Pediatrics) (India)
சிரேஷ்ட விரிவுரையாளர். சித்த மருத்துவத்துறை.
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

வெளியீடு
சித்தமருத்துவ வளர்ச்சிக் கழகம்
*199/1, கில்னர் லேன், யாழ்ப்பாணம்.*

| | | |
|---|---|---|
| ***Tittle of the book*** | :- | Maruththuvamum Sothidamum. (Tamilar Vaazhvil Siddha Maruththuvam) |
| ***Author*** | :- | Dr.S. Sivashanmugarajah B.S.M.S. (Hons), (S.L.), M.D. (S) (India) |
| ***Publisher*** | :- | Siddha Medical Development Society (S.M.D.S.) 199 / 1, Kilner Lane, Jaffna. |
| ***Copy Right:*** | :- | Author |
| ***Printers*** | :- | Bharathy Pathippakam, 430, K.K.S Road, Jaffna. |
| ***Edition*** | :- | First, August 2006. |
| ***Pages*** | :- | XIV + 140 |
| ***Price*** | :- | Rs: 270 |

அகில இலங்கைச் சமாதான நீதிவானும், இளைப்பாறிய கோட்டக்கல்விப் பணிப்பாளரும், கந்தரோடை ஸ்கந்தவரோதயக் கல்லூரியின் முந்நாள் பிரதி அதிபரும், கந்தரோடை தமிழ்க் கந்தையா வித்தியாசாலை முந்நாள் அதிபரும், யாழ். சைவ வித்தியா விருத்திச் சங்கத் தலைவருமான ஆசிரியப்பெருந்தகை

**சித்தாந்த வித்தகர் அ. தற்பரானந்தன்**

அவர்கள் வழங்கிய

# அணிந்துரை

தமிழர் வாழ்வில் சித்தமருத்துவமும் சோதிடமும் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்துள்ளன. உதாரண மாகத் தமிழ்ப் புத்தாண்டை எடுத்துக் கொண்டால் பஞ்சாங்கம் (வாரம், நட்சத்திரம், யோகம், நிதி, கரணம் ஆகிய ஐந்தும்) பார்த்தே கொண்டாடுகின்றோம். விஷு புண்ணிய காலம் பார்த்து மருத்துநீர் தேய்த்து, அவ்வவ் வாண்டுக்குரியதெனக் கூறப்பட்ட மூலிகை இலையினைத் (உ-ம் ஆல் , கொன்றை, வேம்பு, புங்கு, கடம்பு) தலையிலும், காலிலும் வைத்து நீராடுகின்றோம். சுபநேரம் பார்த்துக் கருமங்களை ஆரம்பிக்கிறோம்.

திருமணத்திற்குப் பொருத்தம் பார்க்கிறோம். விவாகப் பொருத்தம் முக்கியமான பத்தினுள் நட்சத்திரம், கணம், யோனி, இராசி, இரச்சு ஆகிய ஐந்துக்கும்மேல் பொருந் தின் உத்தமம் என்று ஜோதிடம் கூறுகிறது. இன்று இவற்றைப் பாராது நாத்திகம் பேசி மணம்புரிந்தோர் அல்லல்படுவதைக் காண்கிறோம். ஆண், பெண் இரு வருக்கும் அல்லது இருவரில் ஒருவருக்குப் புத்திரதோஷம் இருப்பின் குழந்தைப் பாக்கியம் கிட்டாது. சித்த வைத்தியர் களுக்குச் சோதிடம் நன்கு தெரிந்திருப்பதால் மகப்பேறு சம்பந்தமான வைத்தியம் செய்யும்போது சரியான விளக் கமும் தகுந்த பரிகாரமுங் கூறுகின்றனர்.

பரம்பரை வியாதிகள், மாறாது நீடித்து நிற்கும் வியாதிகள் (தீராத வியாதிகள்) என்பவற்றுக்குக் கன்ம வினையே காரணம் எனச் சித்தவைத்தியத்தில் கூறப்படு கின்றது. இது சம்பந்தமாக சித்தர் கன்மகாண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது. கர்ம வினையின்படி ஒருவனுக்கு ஏற்படுபவைகளை அனுபவித்தே ஆகவேண்டும். அல்லது மறுபிறவியெடுத்து அனுபவிக்க வேண்டிவரும். பூர்விக கர்மத்தினால் ஏற்படும் நோய்களுக்கு தெய்வீக முறைப் படிதான் சிகிச்சையளிக்க முடியும் என்று சித்தமருத்து வத்தில் பரிகாரங்கூறப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

தமிழ் மக்கள் மருந்து உண்ணத் தொடங்குவதற்கு நாள் நட்சத்திரம் பார்த்துத் தொடங்கும் வழக்கம் காணப் படுகிறது. உதாரணமாக, ஞாயிறு, செவ்வாய், வியாழன், ஆகிய நாட்கள் மருந்துண்ணத் தொடங்கச் சிறந்தன என்றும், ஜென்ம நட்சத்திரத்திலும் வேறுசில நட்சத்திரங் களிலும் மருந்துண்ணத் தொடங்கக் கூடாது என்றுங் கூறுவர்.

மேலும், பரணி, கார்த்திகை, திருவாதிரை, அவிட்டம், சதயம், பூரட்டாதி, கேட்டை, ஆயிலியம், சுவாதி போன்ற நட்சத்திரங்களில் நோய் உண்டானால் மரணம் ஏற்படக்கூடும். அத்துடன் சதுர்த்தி, சஷ்டி, நவமி, துவாதசி திதிகளில் நோய் ஏற்பட்டாலும் மரணபயம் உண்டு என்பர். மேலும் வருடம் பிறந்தபின் சுபநாள் பார்த்தே தலைக்கு எண்ணெய் வைப்பர். திங்கள், புதன், சனி ஆகிய கிழமைகள் இதற்குச் சிறந்தன. ஜென்ம நட்சத்திரம், மாதப்பிறப்பு, இரவுவேளை, அட்டமி, அமாவாசை, பூரணை, பிரதமை, சஷ்டி ஆகிய திகதிகளும் எண்ணெய் வைப்பதற்கு ஆகாத நாட்களாகும்.

அறுவை வைத்தியத்திற்கும் (சத்திர சிகிச்சை) நட்சத்திரம், திதி முதலியன பார்க்கப்படுகின்றன. மேல் நாட்டு முறை வைத்தியம் செய்யும் தமிழர்களில் பலர் இன்றும் நட்சத்திரம், திதி பார்த்தே செய்கின்றனர், செய்விக்கின்றனர்.

பண்டைய காலத்தில் மன்னர்களும் சித்த வைத்தியமும் சோதிடமும் நன்கு தெரிந்திருந்தனர். அவர்களின் அவையில் சோதிடர்களும், சித்தமருத்துவர்களும் தவறாது இடம் பெற்றிருந்தனர். இலங்கை கோட்டை, கண்டி, யாழ்ப்பாணம் என மூன்று தனியரசுகளாக விளங்கிய பிற்காலத்தில் கோட்டையைச் சிங்கள மன்னர்களும், கண்டியை இந்திய நாயக்க மன்னரும் யாழ்ப்பாணத்தை ஆரியச் சக்கரவர்த்திகளும் ஆண்டு வந்தனர். அக்காலத்தில் யாழ்ப்பாணத்தரசர் சித்த வைத்தியத்தையும், சோதிடத்தையும் இரு கண்ணெனப் போற்றி வளர்த்தனர். செகராசசேகரன் என்ற மன்னன் காலத்தில் செகராச சேகரம் என்ற சித்த வைத்திய நூலும், செகராச சேகரமாலை என்னும் சோதிட நூலும் ஆக்கப்பட்டமையும் பரராசசேகரன் காலத்தில் பரராசசேகர வைத்தியநூல் ஆக்கப்பட்டதும் குறிப்பிடத்தக்கது.

கந்தரோடை தலைநகராக விளங்கிய தொல்பதி யாகும். கந்தரோடையை ஊடறுத்துப் பாயும் வழுக்கை யாறு கடலுடன் கலப்பதால் துறைமுகமூலம் கடல், ஆற்று வழிகளால் வியாபார ஸ்தலமாக அக்காலத்தில் விளங்கி யிருக்க வேண்டும். இப்பகுதியில் கிடைத்துள்ள சீன, கிரேக்க, உரோம, ஒல்லாந்த நாணயங்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. பராக்கிரமபாகு, சேதுமன்னர் களின் நாணயங்களும் இங்கு கிடைக்கப் பெற்றுள்ளன. இத்தகு சிறப்பு வாய்ந்த நகரில் அறிவு, ஒழுக்கங்களில்

*சிறந்த சைவச்சான்றோர் வாழ்ந்துள்ளனர். தமக்குரிய நெறி தவறாது சிவபூஜை செய்துவந்த சிவப்பிராமணர்களும் வாழ்ந்துள்ளனர். இந்நகரில் பல பிராமணக் குடியிருப்பு கள் இருந்தமைக்குச் சான்றுகள் உள. இன்றும் 'பிராமண வளவு' என்ற குறிச்சி உள்ளது. கந்தரோடைக்கும் உடுவில், காரைநகர், சுன்னாகம், மயிலணி, கோப்பாய் ஆகிய இடங்களில் வசிக்கும் பிராமணர்களுக்கும் நெருங் கிய தொடர்பு இருந்தது. இவ்வூரில் உள்ள அந்தணர்கள் கல்வி அறிவிலும், ஒழுக்கத்திலும், சமய அனுட்டானங் களிலும் மேம்பட்டவர்கள் என 'ஈழமண்டல சதகம்' கூறுகிறது. வைத்திய கலாநிதி சேதுமாதவர் சிவசண்முக ராஜா அவர்களின் பிறந்த ஊர் கந்தரோடையாகும். இவரின் தந்தை பிரம்மஸ்ரீ சேதுமாதவர் அவர்களின் தந்தை பிரம்மஸ்ரீ சுப்பிரமணியஐயர் (சாமிஐயர் 1878 - 1936) மாகியப்பிட்டி அங்கணம்மைக்கடவை மீனாட்சி அம்பாள் ஆலய ஆதீனகர்த்தாக்களில் ஒருவர். சித்த வைத்தியத்திலும் சோதிடத்திலும் வல்லுநராக விளங்கி யவர். அவ்விதமே தாய் வழிப்பேரனாகிய சிவஸ்ரீ சிவசுப்பிர மணியக் குருக்கள் தமிழிலும் சமஸ்கிருதத்திலும் பாண்டித்தியம் பெற்றிருந்ததுடன் கந்தரோடை தமிழ்க் கந்தையா வித்தியாசாலையில் தலைமை ஆசிரியராகப் பல்லாண்டு காலம் பணி புரிந்தவர். நியமம் தவறாமல் தினசரி சிவபூஜை செய்து வந்ததுடன் இலங்கையின் பல பாகங்களிலும் ஆலய மகோற்சவங்கள், கும்பாபிடே கங்கள் முதலியவற்றை முன்னின்று நடத்தியவர்.*

*எனவே, இவர்கள் வழிவந்த வைத்திய கலாநிதி சிவசண்முகராஜா அவர்கள் வைத்தியம், சமயம், தமிழ் என்பவற்றில் சிறந்த அறிவுபெற்றுள்ளது ஆச்சரியப்படத் தக்க ஒன்றல்ல. அத்துடன் ' விளையும் பயிரை முளையில் தெரியும்' என்ற முதுமொழிக்கிணங்க கந்தரோடை தமிழ்க் கந்தையா வித்தியாசாலையில் ஆரம்பக்கல்வியைக் கற்ற*

இவரது ஆற்றல், திறமைகள் மெச்சக்கூடியதாக இருந்ததைக் காணமுடிந்தது.

யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் பயின்று ஐந்து ஆண்டுகளும் முதல்வகுப்பில் தேறி (B.S.M.S பட்டப் படிப்பில் ஐந்து ஆண்டுகளும் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ற சிறப்பு இதுவரை இவருக்கு மட்டுமே உண்டு என்று அறிகின்றேன்.) வைத்திய கலாநிதியாக வெளியேறி சித்தமருத்துவ விரிவுரையாளராக, சித்தமருத்துவ அதிகாரி யாக பணிபுரிந்து 1997 இல் இந்தியா சென்று குழந்தை மருத்துவத்தில் பட்ட மேற்படிப்பைப் பூர்த்தி செய்து தற்போது யாழ்ப்பாணப் பல்கலைக்கழகச் சித்தமருத்துவத் துறையில் சிரேஷ்ட விரிவுரையாளராக பணிபுரிந்து வருகிறார். பத்துக்கும் மேற்பட்ட சித்தமருத்துவ நூல்களை வெளியிட்டுள்ள இவரின் சித்தமருத்துவமும் சோதிடமும் (தமிழர் வாழ்வில் சித்தமருத்துவம்) என்ற இந்நூலுக்கு அணிந்துரை வழங்குவதில் மகிழ்ச்சியடைகின்றேன். மிகவும் எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ள இந்நூல் சித்த மருத்துவர்களுக்கு மட்டுமன்றி ஏனையோருக்கும் பயன்படக்கூடிய ஒன்றாகும்.

19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் கந்தரோடை யில் இவரின் பேரனார் சிறந்த சித்தமருத்துவராகவும், சோதிட விற்பன்னராகவும் விளங்கினார். அதே காலத்தில் முத்துக்குமாரு வைத்தியர் (முத்துப்பரியாரியார்) குழந்தை வைத்தியம், மகப்பேற்று வைத்தியத்தில் சிறந்து விளங்கினார். அவர்கள் வழியில் கந்தரோடையைச் சேர்ந்த வைத்தியகலாநிதி சேதுமாதவர் சிவசண்முகராஜா சித்த மருத்துவத்தில் சிறப்புற்று விளங்குவது எமது கந்தரோடை நகருக்குப் பெருமைதரும் ஒன்றாகும். அவரது பணிகள் தொடர வாழ்த்துகிறேன்.

"ஆனந்தகம்"
கந்தரோடை,
சுன்னாகம்.
27.08.2006

அ. தற்பரானந்தன்

# என்னுரை

முற்காலத்தில் ஒருவர் நோயுற்றுப் படுக்கையில் கிடக்கும் போது வைத்தியர் அவரின் கைநாடி பார்த்து இத்தனை நாளில் நோய்மாறும்; அல்லது இத்தனை நாளில் மரணம் ஏற்படும் என்று துல்லியமாகக் கூறுவர் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். உண்மையில் கை நாடி மட்டுமன்றி நோயாளி நோயுற்ற நாள், நட்சத்திரம், திதி முதலிய பல விடயங்களை மனதில் ஒரு கணத்திலேயே அலசி ஆராய்ந்துதான் வைத்தியர்கள் அவ்விதம் கூறியிருக்க வேண்டும். நான் சிறுவனாக இருந்த காலத்தில் எமது உறவினர் யாரும் கடுமையாக நோயுற்று விட்டால் எனது தகப்பனார், நாள் நட்சத்திரம் பிரச்சினையாக இல்லை தப்பிவிடுவார், இன்று பரணி, அட்டமி ஒரு கிழமை போனால்தான் தெரியும் என்றெல்லாம் கூறக் கேட்டிருக்கிறேன். அப்போது எனக்கு இவை என்ன வென்றே விளங்கவில்லை.

எனக்கு முறைப்படி சோதிடம் கற்றுத்தந்தவர் எனது சிறிய தகப்பனார் சிவஸ்ரீ ஷ. சோமாஸ்கந்தக் குருக்களாவார். நான் பல்கலைக் கழகத்தில் சித்த மருத்துவம் கற்றுக் கொண்டிருந்த வேளையில் மருத்து வத்தில் சோதிடம் ஓர் அவசியமானதுறை என்று கூறி ஊக்குவித்தவர் கல்வியங்காடு மருத்துவ அறிஞர் க. இராமசுவாமி ஆவார். பின்னர் இந்தியாவில் பட்ட மேற்படிப்பை மேற்கொண்டிருந்த வேளையில் மருத்து வத்துக்கும் சோதிடத்துக்கும் உள்ள தொடர்பின் முக்கியத்துவத்தை எனக்கு உணர வைத்தவர் பட்ட மேற்படிப்புத்துறை சிறப்பு மருத்துவத்துறைத் தலைவர் பேராசிரியர் ந. செல்லமுத்து அவர்களா

வார். அவர் எனக்கு உபதேசித்த அடிப்படையிலேயே பகுதி II ஆக்கப்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

1993 இல் சுதேச வைத்திய சங்கத்தின் சார்பில் **'சுதேசமருத்தும்'** என்னும் காலாண்டுச் சஞ்சிகை வெளியிடப்பட்டது. அச்சஞ்சிகையின் ஆசிரியராக நான் கடமையாற்றினேன். அச்சஞ்சிகையில் **'சோதிடமும் மருத்துவமும்'** என்ற தலைப்பில் கட்டுரைத் தொடர் ஒன்றை எழுத ஆரம்பித்திருந்தேன். துரதிர்ஷ்டவசமாக அச்சஞ்சிகை தொடர்ந்து வெளிவரவில்லை. எனது முயற்சியும் அரைகுறையாக நின்று விட்டது. 2002 இல் சித்தமருத்துவ மூலதத்துவம் என்ற எனது நூலில் சோதிடமும் மருத்துவமும் பற்றி ஓர் அத்தியாயம் எழுதியிருந்தேன். அதைப்படித்த பலரும் அது பற்றி விரிவாக எழுதவேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். அண்மையில் எனது புத்தக அலுமாரியை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்த போது மருத்துவ சோதிடம் சம்பந்தமாக நான் 1993 இலிருந்து சேகரித்து வைத்திருத்த பல குறிப்புகள் கிடைத்தன. அவற்றைப் பார்த்ததும் அவற்றை ஒழுங்குபடுத்தி நூலுருவாக் கினால் பலருக்கும் பிரயோசனப்படும் என்று தோன்றியது. அதன் பயனாகவே இன்று இந்நூல் உங்கள் கைகளில் கிடைத்துள்ளது.

சித்த மருத்துவம் ஆன்மீக மேம்பாட்டிற்கும் ஆன்ம ஈடேற்றத்துக்கும் வழிகாட்டும் ஒரு மெய்ஞ் ஞான மருத்துவமுறையாகும். எனவேதான் சமய அடிப்படையை அது இன்றளவும் கொண்டு விளங்கு கிறது. சோதிடமும் சமய அடிப்படையில் எழுந்த ஒன்றாகவே உள்ளது. நட்சத்திரங்கள் - கிரகங்கள் - இராசிகள் அனைத்தும் தெய்வ சம்பந்தமுள்ளவை யாக அதிதேவதைகளைக் கொண்டிருக்கின்றன.

எனவே, சித்தமருத்துவத்தைக் கருதும் போது சமயம் - சோதிடம் என்பவற்றையும் இணைத்துப் பார்த்தல் வேண்டும். அப்போதுதான் சித்த மருத்துவ உண்மைகளை தெளிவாக விளங்கிக் கொள்ள முடியும்.

சித்த மருத்துவத்துக்கும் சோதிடத்துக்கும் நெருங்கிய தொடர்புகள் இருக்கின்ற போதிலும் சித்த மருத்துவ பாடத்திட்டத்தில் மருத்துவ சோதிடத்தைச் சேர்க்காது விட்டுள்ளமை வருந்தற்குரியது.

இந்நூல் மிகமிக இலகுவாக விளங்கிக் கொள்ளும் வகையில் ஆக்கப்பட்டுள்ளது. அதனால் இதைப் படித்ததும் எல்லாமே விளங்கி விட்டதாக நினைக்கக் கூடாது. சோதிடரீதியாக பலன் அறிதல் என்பது இலகுவான விடயமல்ல. கிரகபலம், கிரகச் சேர்க்கை, பார்வை போன்ற பல்வேறு விடயங்களை ஆராய்ச்சி செய்தே இறுதி முடிவுக்கு வரவேண்டும்.

இந்நூலாக்கத்துக்கு எனக்குச் சகல வழிகளிலும் உதவி புரிந்த எனது சகோதரன் பிரம்மஸ்ரீ சே. சிவசுப்பிரமணிய சர்மா அவர்கட்கும், சிறந்த தொரு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ள எனது ஆசிரியப் பெருந்தகை அ. தற்பரானந்தன் அவர்கட் கும், அட்டைப் படத்தை வரைந்துதவிய ஓவியர் ரமணி அவர்களுக்கும், இந்நூலைச் சிறந்தமுறையில் கணினிப்பதிவு செய்வதற்கு உதவிய பாரதி பதிப்பக அதிபர் திரு. இ. சங்கர் அவர்கட்கும் மற்றும் ஊழியர் களுக்கும் எனது நன்றிகளைத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

**சே. சிவசண்முகராஜா**

**யாழ்ப்பாணம்.**

# பொருளடக்கம்

# அறிமுகம்

*சித்த மருத்துவத்தை மணி - மந்திர அவுடத வைத்தியமுறை என்றுங் கூறுவர். இதில் மணி என்பது சோதிடத்தைக் குறிக்கும் என்பர். எனவே, சித்த மருத்துவர்களுக்கு மருத்துவம் சார்ந்த சோதிட அறிவு* (Medical Astrology) *அவசியமாகும். தற்காலத்தில் சித்தமருத்துவம் சித்திக்காமல் இருப்பதற்கு சித்த மருத்துவர்களுக்குச் சோதிட அறிவின்மையும் ஒரு முக்கிய காரணமாகும். நவகோள்களும் மனித உடலில் ஆட்சி செலுத்திய வண்ணம் உள்ளன. அவற்றைச் சரிவர அறிந்து, குறைபாடுகளை நிவர்த்திப்பதன் மூலமே நோயை வேருடன் களைய முடியும். தற்காலத்தில் சித்தமருத்துவர்களிற் பலர் நோயாளியின் நோய் நிலைகளை மேலைத்தேச மருத்துவ நூல்களில் கூறப்பட்டுள்ள நோய் நிலைகளுடன் ஒப்பிட்டு ஆராய்ந்து பரிகாரம் காண்பதிலேயே முக்கிய கவனம் செலுத்தி வருகின்றனர். இது குறுகிய கால நிவாரணத்துக்கே உதவும். ஆனால் சித்தர்களின் மணி - மந்திர - அவுடத முறையைப் பின்பற்றினால் நோயை அதன் மூலஸ்தானத்திலிருந்தே அகற்ற*

முடியும். சித்த மருத்துவர்களுக்குச் சோதிட அறிவு மிகவும் அவசியம் என்று சித்தர்கள் வலியுறுத்திக் கூறியுள்ளமையும் நோக்கற்குரியது.

**'சோதிடம் பஞ்சபட்சி துலங்கிய சரநூல் மார்க்கம்**
**கோதறு வகாரவித்தை குருமுனி - ஓதுபாடல்**
**தீதிலாக் கக்கிசங்கள் செப்பிய கன்மகாண்டம்**
**ஈதெலாங் கற்றுணர்ந்தோர் இவர்ளே வைத்தியராவர்'**

- பதினெண் சித்தர் நாடி நூல்

அதாவது சோதிட சாஸ்திரம், பஞ்சபட்சி சாஸ் திரம், மூச்சுப்பயிற்சி (சரநூல் மார்க்கம்), தத்துவங் கள் (கக்கிசங்கள்), சோதிட நாடி சாஸ்திரம் (கன்ம காண்டம்) வேதைநூல் (அகார வித்தை), அகத்தியர் முதலான சித்தர்களின் (குருமுனி) நூல்கள் என்பவற் றைக் கற்று உணர்ந்தவர்களே வைத்தியர்களாவார்.

சித்த மருத்துவத்தில் பரம்பரை வியாதிகள், தீராத வியாதிகள் என்பவற்றுக்குக் காரணம் கர்ம வினை என்று கூறப்பட்டுள்ளது. அதுபற்றிய விபரங்கள் சித்தர்நாடி எனப்படும் கன்ம காண்டத்தில் (கர்மம்+ காண்டம்) கூறப்பட்டுள்ளது. இது ஒவ்வொரு வரினதும் தனிப்பட்ட ஜாதக விடயமாகும். எத்த னையோ நூற்றாண்டுகளுக்கு முன்னர் சித்தர்கள் தமது தெய்வ சகாயத்தினால் எழுதி வைத்துள்ள நாடி சாஸ்திரம் தற்போதும் வழக்கிலுள்ளது. இதனையே காண்டம் என்று பொதுவில் கூறுவர். காண்டம் வாசிப் பவர்கள் தற்போதும் இலங்கையிலும் இந்தியாவிலும் இருக்கிறார்கள். காண்டத்திலிருந்து ஒருவரின் பூர்வீக

வரலாறு, தற்போதைய பிறப்பு, நடந்தவை, நடப்பவை, நடக்கப்போகின்ற விடயங்கள், தற்போதைய வாழ்க்கையில் எழும் பிரச்சினைகளுக்கான பரிகாரங்கள் (சாந்தி காண்டம்) என்பவற்றை அறிந்து கொள்ளல் முடியும்.

காண்டம் வாசிப்பவர் தனது கவனக்குறைவினாலும் அல்லது அர்த்தம் சொல்வதில் பிழைவிடுவதாலும் தவறுகள் ஏற்படலாமேயொழிய நூலில் (ஏட்டில்) பிழைகள் இல்லை. பூர்வ கர்மத்தினால் தெய்வ சங்கல்பமாக ஏற்படும் நோய்களுக்கு தெய்வீக முறைப்படிதான் பரிகாரம் காணமுடியும். சோதிட கன்ம காண்டத்தில் அவற்றுக்கான பரிகாரங்கள் கூறப்பட்டுள்ளன.

(குறிப்பு - சோதிடத்தில் வரும் சித்தர் நாடி நூல் என்பது காண்டத்தையே குறிக்கிறது. மருத்துவத்தில் வரும் சித்தர் நாடி நூல் என்பது கைநாடி பிடித்து நோயைக் கண்டறிந்து கொள்வதைக் குறிக்கிறது.)

மருத்துவன் அறிய வேண்டுபவை பற்றி **'அகத்தியர் சில்லறைக் கோவை'** குறிப்பிடுகையில்.

**'பார்க்கின்ற சோதிடமே பிராயகாலம்**
**பகரும் விவகாரமொடு பிராயச்சித்தம்**
**ஏர்க்கும் வயித்தியமிந்த நான்கும் வல்லோர்**
**இதன்வழியே சிகிச்சை ரட்சை செய்வாராகில்**
**ஆர்க்குமே தோடமில்லை: இவைகள் யாவும்**
**அறியாதார் சாத்திரம் வல்லவர்கள் போலத்**
**தீர்க்கமடி பிடியாகச் செய்வாராகில்**
**சீவபிர மத்தி வதை சேர்வாரன்றே'**

அதாவது சோதிட சாத்திரம், நோயாளியின் வயது, தொழில் முறைகள், கிரகக் குற்றங்களுக்கு செய்யப் பட வேண்டிய பிராயச்சித்தங்கள் என்பவற்றைக் கருத் தில் கொண்டு சிகிச்சை செய்தல் வேண்டும். அதனால் யாருக்கும் குற்றமில்லை. நன்மையே ஏற்படும். அதை விடுத்து இவை ஒன்றையும் அறியாமல் அதேவேளை எல்லா நூல்களையும் கற்றவர் போல் நடித்து சிகிச்சை செய்வார்களேயானால் அவர்கள் சீவபிரம ஹத்தி செய்த குற்றத்துக்கு ஒப்பாவார்கள்.

மருந்துக்காக மூலிகை சேகரிப்பதாக இருந் தாலும் சரி, புதிதாக மருந்து தயாரிப்பதாக இருந் தாலும் சரி, நோய்க்கு வைத்தியம் பார்ப்பதாக இருந் தாலும் சரி, நோய்க்கு மருந்துண்ண ஆரம்பிப்பதாக இருந்தாலும் சரி நல்ல நாள், நட்சத்திரம், ஹோரை முதலிய பல விடயங்களைப் பார்த்தல் வேண்டும் என்று சித்த மருத்துவ நூல்களில் ஆங்காங்கே கூறப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

சித்தமருத்துவர்கள் சோதிடக் கலையில் வல்ல வர்களாக ஆகாவிட்டாலும் ஓரளவிற்காவது அக் கலையை அறிந்து வைத்திருப்பது அவசியமாகும். அந்த வகையில் சில அடிப்படை மருத்துவ சோதிட விடயங்கள் பற்றி இந்நூலில் எடுத்துக் கூற முயற்சி எடுத்துள்ளேன்.

இந்நூல் ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

பகுதி I இல் ஒருவரின் ஜாதகத்தை விளங்கிக் கொள்வதற்கு அவசியமான விடயங்கள் பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

பகுதி II இல் நவக்கோள்களின் பல்வேறு தன்மைகள், உடலுக்கும் அவற்றுக்கும் இடையிலுள்ள தொடர்பு, மருத்துவத்தில் அவற்றின் முக்கியத்துவம் என்பன பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

பகுதி III இல் உடல் ஆரோக்கியம், நோய்நிலை பற்றியும், அவற்றுக்குக் காரணமான கிரகநிலைகள் பற்றியும், மலட்டுத்தன்மை பற்றியும் எடுத்துக் கூறப் பட்டுள்ளது.

பகுதி IV இல் ஒருவர் நோய்ப்படும் நாள், நட்சத்திரங்கள் பற்றியும் நோய் தீரும், தீராநிலைகள் பற்றியும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

பகுதி V இல் சிகிச்சை பெறுவதற்கும் மருந்துண் பதற்கும் உகந்த நாள், நட்சத்திரங்கள், திதிகள் பற்றியும் அவற்றுக்கு ஆகாத நாட்கள் பற்றியும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

பகுதி VI இல் சில பொதுப்பரிகார முறைகள் பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

நோயாளிக்குச் சிகிச்சையளிக்கும் போது ரோகி பலம், ரோகபலம் என்பவற்றைக் கவனிப்பதுடன் கிரக பலத்தையும் கவனத்திற் கொள்ளுதல் வேண்டும்.

வைத்தியர்களும், வைத்திய மாணவர்களும் இந் நூலை பல தடவை வாசித்தும் தமது நோயாளிகளின் ஜாதக அமைப்புகளுடன் ஒப்பிட்டு ஆராய்ந்தும், பிற சோதிட நூல்களை வாசித்தும் பயன்பெறவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

# பகுதி - I

## 1.01 நட்சத்திரங்கள்

நட்சத்திரங்கள் இருபத்தேழாகும். அவையாவன.

1. அசுவினி
2. பரணி
3. கார்த்திகை
4. ரோகிணி
5. மிருகசீரிடம்
6. திருவாதிரை
7. புனர்பூசம்
8. பூசம்
9. ஆயிலியம்
10. மகம்
11. பூரம்
12. உத்தரம்
13. அத்தம்
14. சித்திரை
15. சுவாதி
16. விசாகம்
17. அனுஷம்
18. கேட்டை
19. மூலம்
20. பூராடம்
21. உத்தராடம்
22. திருவோணம்
23. அவிட்டம்
24. சதயம்
25. பூரட்டாதி
26. உத்தரட்டாதி
27. ரேவதி

ஒவ்வொரு நட்சத்திரமும் முதலாங்கால், இரண்டாங்கால், மூன்றாங்கால், நாலாங்கால் என்று நான்குகால்கள் அல்லது நான்கு பாதங்களைக் கொண்டுள்ளன.

எனவே, 27 நட்சத்திரங்களுக்குமாக மொத்தம் 108 (27x4) கால்கள் (பாதங்கள்) உள.

## 1.02 இராசிகள்

**இராசிகள் பன்னிரண்டாகும். அவையாவன:**

| | | |
|---|---|---|
| *1.* | *மேடம்* | (Aries) |
| *2.* | *இடபம்* | (Taurus) |
| *3.* | *மிதுனம்* | (Gemini) |
| *4.* | *கடகம்* | (Cancer) |
| *5.* | *சிங்கம்* | (Leo) |
| *6.* | *கன்னி* | (Virgo) |
| *7.* | *துலாம்* | (Libra) |
| *8.* | *விருச்சிகம்* | (Scorpio) |
| *9.* | *தனுசு* | (Sagittarius) |
| *10.* | *மகரம்* | (Capricorn) |
| *11.* | *கும்பம்* | (Aquarius) |
| *12.* | *மீனம்* | (Pisces) |

| | | | |
|---|---|---|---|
| 12. மீனம் | 1. மேடம் | 2. இடபம் | 3. மிதுனம் |
| 11. கும்பம் | பன்னிரு ராசிகள் | | 4. கடகம் |
| 10. மகரம் | | | 5. சிங்கம் |
| 9. தனுசு | 8. விருச்சிகம் | 7. துலாம் | 6. கன்னி |

## 1.03 இராசிகளின் வடிவங்கள்

| இராசி | | வடிவம் |
|---|---|---|
| 1. மேடம் | - | ஆடு |
| 2. இடபம் | - | எருது |
| 3. மிதுனம் | - | ஆணும் பெண்ணும் |
| 4. கடகம் | - | நண்டு |
| 5. சிங்கம் | - | சிங்கம் |
| 6. கன்னி | - | பெண் |
| 7. துலாம் | - | தராசு |
| 8. விருச்சிகம் | - | தேள் |
| 9. தனுசு | - | வில் |
| 10. மகரம் | - | சுறாமீன் |
| 11. கும்பம் | - | குடம் |
| 12. மீனம் | | மீன் |

## 1.04 இராசிகளின் தன்மை

இராசிகளிற் சில சரம் அல்லது அசையும் தன்மை வாய்ந்தனவாக உள்ளன. அவை ஜலராசி அல்லது சரராசிகள் எனப்படும். சில ராசிகள் ஸ்திரமானவை. அவை ஸ்திர ராசிகள் எனப்படும். சில ராசிகள் சரம், ஸ்திரம் என்பவற்றுக்கு இடைப் பட்டவையாக உள்ளன. அவை உபயராசிகள் எனப்படும்.

| | இராசி | | தன்மை |
|---|---|---|---|
| 1. | மேடம் | - | சரராசி |
| 2. | இடபம் | - | ஸ்திரராசி |
| 3. | மிதுனம் | - | உபயராசி |
| 4. | கடகம் | - | சரராசி |
| 5. | சிங்கம் | - | ஸ்திரராசி |
| 6. | கன்னி | - | உபயராசி |
| 7. | துலாம் | - | சரராசி |
| 8. | விருச்சிகம் | - | ஸ்திரராசி |
| 9. | தனுசு | - | உபயராசி |
| 10. | மகரம் | - | சரராசி |
| 11. | கும்பம் | - | ஸ்திரராசி |
| 12. | மீனம் | - | உபயராசி |

| | | | |
|---|---|---|---|
| **மீனம்**<br>*உபயம்* | **மேடம்**<br>*சரம்* | **இடபம்**<br>*ஸ்திரம்* | **மிதுனம்**<br>*உபயம்* |
| **கும்பம்**<br>*ஸ்திரம்* | **இராசிகளின் தன்மை** | | **கடகம்**<br>*சரம்* |
| **மகரம்**<br>*சரம்* | | | **சிங்கம்**<br>*ஸ்திரம்* |
| **தனுசு**<br>*உபயம்* | **விருச்சிகம்**<br>*ஸ்திரம்* | **துலாம்**<br>*சரம்* | **கன்னி**<br>*உபயம்* |

## 1.05 நட்சத்திரங்களும் இராசிகளும்

*இருபத்தேழு நட்சத்திரங்களும் பன்னிரு ராசிகளுள் அடங்குகின்றன. நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளது போன்று 27 நட்சத்திரங்களுக்குமாக மொத்தம் 108 கால்கள் உள. இவற்றை 12 ராசிகளுக்குள் அடக்கும் போது* ($108 \div 12 = 9$) *ஒரு ராசியில் ஒன்பது நட்சத்திர பாதங்கள் அடங்குகின்றன. (அதாவது இரண்டேகால் நட்சத்திரங்கள்) அதன்படி.*

| இராசி | | நட்சத்திரங்கள் |
|---|---|---|
| *1.* | *மேடம்* | *அசுவினி - 4 பாதங்கள்* |
| | | *பரணி - 4 பாதங்கள்* |
| | | *கார்த்திகை - 1 ஆம் பாதம்* |
| *2.* | *இடபம்* | *கார்த்திகை - 2, 3, 4 ஆம் பாதங்கள்* |
| | | *ரோகிணி - 4 பாதங்கள்* |
| | | *மிருகசீரிடம் 1ஆம், 2ம் பாதங்கள்* |
| *3.* | *மிதுனம்* | *மிருகசீரிடம் - 3, 4 ஆம் பாதங்கள்* |
| | | *திருவாதிரை - 4 பாதங்கள்* |
| | | *புனர்பூசம் 1, 2, 3 ஆம் பாதங்கள்* |
| *4.* | *கடகம்* | *புனர்பூசம் - 4 ஆம் பாதம்* |
| | | *பூசம் - 4 பாதங்கள்* |
| | | *ஆயிலியம் - 4 பாதங்கள்* |
| *5.* | *சிங்கம்* | *மகம் - 4 பாதங்கள்* |
| | | *பூரம் - 4 பாதங்கள்* |
| | | *உத்தரம் - 1ஆம் பாதம்* |

6. கன்னி
- உத்தரம் - 2,3,4 ஆம் பாதங்கள்
- அத்தம் - 4 பாதங்கள்
- சித்திரை - 1, 2 ஆம் பாதங்கள்

7. துலாம்
- சித்திரை - 3, 4 ஆம் பாதங்கள்
- சுவாதி - 4 பாதங்கள்
- விசாகம் - 1, 2, 3 ஆம் பாதங்கள்

8. விருச்சிகம்
- விசாகம் - 4 ஆம் பாதம்
- அனுஷம் - 4 பாதங்கள்
- கேட்டை - 4 பாதங்கள்

9. தனுசு
- மூலம் - 4 பாதங்கள்
- பூராடம் - 4 பாதங்கள்
- உத்தராடம் - 1ஆம் பாதம்

10. மகரம்
- உத்தராடம் 2, 3, 4 ஆம் பாதங்கள்
- திருவோணம் - 4 பாதங்கள்
- அவிட்டம் - 1, 2ஆம் பாதங்கள்

11. கும்பம்
- அவிட்டம் 3,4 ஆம் பாதங்கள்
- சதயம் - 4 பாதங்கள்
- பூரட்டாதி - 1, 2, 3 ஆம் பாதங்கள்

12. மீனம்
- பூரட்டாதி - 4ஆம் பாதம்
- உத்தரட்டாதி - 4 பாதங்கள்
- ரேவதி - 4 பாதங்கள்.

| | | | |
|---|---|---|---|
| **மீனம்**<br>பூரட்டாதி<br>4ஆம் பாதம்<br>உத்தரட்டாதி<br>4 பாதங்கள்<br>ரேவதி<br>4 பாதங்கள் | **மேடம்**<br>அசுவினி<br>4 பாதங்கள்<br>பரணி<br>4 பாதங்கள்<br>கார்த்திகை<br>1ஆம் பாதம் | **இடபம்**<br>கார்த்திகை<br>2, 3, 4ஆம்<br>பாதங்கள்<br>ரோகிணி<br>4 பாதங்கள்<br>மிருகசீரிடம்<br>1, 2 ஆம்<br>பாதங்கள் | **மிதுனம்**<br>மிருகசீரிடம்<br>3, 4ஆம் பாதம்<br>திருவாதிரை<br>4 பாதங்கள்<br>புனர்பூசம்<br>1, 2, 3ஆம் பாதங்கள் |
| **கும்பம்**<br>அவிட்டம்<br>3, 4ஆம் பாதங்கள்<br>சதயம்<br>4 பாதங்கள்<br>பூரட்டாதி<br>1,2,3ஆம் பாதங்கள் | **இராசிகளும்** | **நட்சத்திரங்களும்** | **கடகம்**<br>புனர்பூசம்<br>4ஆம் பாதம்<br>பூசம்<br>4 பாதங்கள்<br>ஆயிலியம்<br>4 பாதங்கள் |
| **மகரம்**<br>உத்தராடம்<br>2,3,4ஆம் பாதங்கள்<br>திருவோணம்<br>4 பாதங்கள்<br>அவிட்டம்<br>1, 2, பாதங்கள் | | | **சிங்கம்**<br>மகம்<br>4 பாதங்கள்<br>பூரம்<br>4 பாதங்கள்<br>உத்தரம்<br>1 ஆம் பாதம் |
| **தனுசு**<br>மூலம்<br>4 பாதங்கள்<br>பூராடம்<br>4 பாதங்கள்<br>உத்தராடம்<br>1 ஆம் பாதம் | **விருச்சிகம்**<br>விசாகம்<br>4ஆம் பாதம்<br>அனுஷம்<br>4 பாதங்கள்<br>கேட்டை<br>4 பாதங்கள் | **துலாம்**<br>சித்திரை<br>3, 4 ஆம்<br>பாதங்கள்<br>சுவாதி<br>4 பாதங்கள்<br>விசாகம்<br>1, 2, 3 ஆம்<br>பாதங்கள் | **கன்னி**<br>உத்தரம்<br>2, 3,4ஆம் பாதம்கள்<br>அத்தம்<br>4 பாதங்கள்<br>சித்திரை<br>1, 2 ஆம் பாதங்கள் |

## 1.06 ஜன்மத்திரயங்கள்

ஒருவரின் ஜன்ம நட்சத்திரத்துக்கு 10 ஆவது நட்சத்திரமும் அதற்கு 9 ஆவது நட்சத்திரமும் ஜன்மத்திரயங்கள் அல்லது கர்ப்பநாள், பகைநாள் எனப்படும். அதாவது

1. அசுவினி - மகம் - மூலம்
2. பரணி - பூரம் - பூராடம்
3. கார்த்திகை - உத்தரம் - உத்தராடம்
4. ரோகிணி - அத்தம் - திருவோணம்
5. மிருகசீரிடம் - சித்திரை - அவிட்டம்
6. திருவாதிரை - சுவாதி - சதயம்
7. புனர்பூசம் - விசாகம் - பூரட்டாதி
8. பூசம் - அனுஷம் - உத்தரட்டாதி
9. ஆயில்யம் - கேட்டை - ரேவதி

ஜன்மத்திரயங்களில் தைலாப்பியங்கம், எண்ணெய் முழுக்கு, நோய்க்கு புதிதாக மருந்துண்ணல் போன்றவை செய்யக் கூடாது.

## 1.07 இராசிகளின் அங்கங்கள் – I

1. மேடம் - தலை
2. இடபம் - முகம்
3. மிதுனம் - மார்பு
4. கடகம் - இருதயம்
5. சிங்கம் - வயிறு
6. கன்னி - கொப்பூள்
7. துலாம் - அடிவயிறு

8. விருச்சிகம் - சிசுனம் (பிறப்புறுப்பு)
9. தனுசு - இருதொடை
10. மகரம் - இருமுழந்தாள்
11. கும்பம் - கணுக்கால்
12. மீனம் - இரு பாதங்கள்

## 1.08 இராசிகளின் அங்கங்கள் – II

| இராசி | | அங்கம் |
|---|---|---|
| 1. | மேடம் | தலை, மூளை, கண், முகம் |
| 2. | இடபம் | கழுத்து, தொண்டை, உண்ணாக்கு |
| 3. | மிதுனம் | நுரையீரல், மார்பு, கைவிரல், மூக்கு |
| 4. | கடகம் | வயிறு, மார்பகம், வாய், நாக்கு |
| 5. | சிங்கம் | இதயம், முதுகு, முதுகுத்தண்டு, கண் |
| 6. | கன்னி | சிறுகுடல், பெருங்குடல், இடை |
| 7. | துலாம் | சிறுநீரகம், தோல் |
| 8. | விருச்சிகம் | பிறப்புறுப்புகள், காது |
| 9. | தனுசு | இடுப்பு, தொடை, கல்லீரல் |
| 10. | மகரம் | பல், எலும்பு, முழங்கால் |
| 11. | கும்பம் | கணுக்கால், இரத்த ஓட்டம் |
| 12. | மீனம் | பாதம், மலக்குடல், மலவாசல் |

## 1.09 நவக்கிரகங்கள்

நவக்கிரகங்கள் என்றால் ஒன்பது கிரகங்கள் என்று பொருள். அவை வருமாறு:

| | கிரகம் | | | | வேறுபெயர் |
|---|---|---|---|---|---|
| 1. | சூரியன் | - | (Sun) | - | ரவி |
| 2. | சந்திரன் | - | (Moon) | - | மதி, திங்கள் |
| 3. | செவ்வாய் | - | (Mars) | - | குஜன் |
| 4. | புதன் | - | (Mercury) | - | |
| 5. | வியாழன் | - | (Jupiter) | - | குரு |
| 6. | வெள்ளி | - | (Venus) | - | சுக்கிரன் |
| 7. | சனி | - | (Saturn) | | |
| 8. | ராகு | - | (Rahu) | | |
| 9. | கேது | - | (Kethu) | | |

தற்காலத்தில் சிலர் இவற்றுடன் யூரேனஸ், நெப்டியூன், என்பவற்றையும் சேர்த்துக்கொள்வதுண்டு.

## 1.10 நவக்கிரகங்களும் இராசிகளும்

நட்சத்திரங்களுக்கும் இராசிகளுக்கும் தொடர் புள்ளது போலவே நவக்கிரகங்களுக்கும் இராசி களுக்கும் தொடர்புகளுள்ளது. இராசிகளிற் சில நவக் கோள்களுக்கு சொந்த வீடாக உள்ளன. அவற்றை அக்கிரகத்தின் **'ஆட்சிவீடு'** என்பர். சில இராசிகள் சில கிரகங்களுக்கு நட்பாக உள்ளன. அவற்றை, **'நட்பு வீடுகள்'** என்பர். சில இராசிகளில் சில கிரகங்கள் உச்சப்பலனைக் கொடுக்க வல்லதாக உள்ளன. அதனை அக்கிரகங்களின், **'உச்சவீடுகள்'** என்பர்.

அதேபோன்று சில இராசிகள் சில கிரகங்களுக்கு பகையாக உள்ளன. அவற்றை அக்கிரகங்களின், **'பகைவீடுகள்'** என்பர். சில இராசிகளில் சில கிரகங்கள் மிகவும் கெடுதலான பலனை வழங்கு பவையாக உள்ளன. அவற்றை அக்கிரகங்களின், **'நீசவீடுகள்'** என்பர்.

சில இராசிகளில் கிரகங்கள் பகையாகவோ, நட்பாகவோ அன்றி சமபலனுக்குரியனவாக உள்ளன. அவற்றை அக்கிரகங்களின், **சமவீடுகள்**, என்பர்.

## 1.11 ஆட்சிவீடுகள்

| | கிரகம் | - | ஆட்சிவீடு (இராசி) |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | சிங்கம் |
| 2. | சந்திரன் | - | கடகம் |
| 3. | செவ்வாய் | - | மேடம் |
| | | | விருச்சிகம் |
| 4. | புதன் | - | மிதுனம் |
| | | | கன்னி |
| 5. | வியாழன் | - | மீனம் |
| | | | தனுசு |
| 6. | வெள்ளி | - | இடபம் |
| | | | துலாம் |
| 7. | சனி | - | மகரம் |
| | | | கும்பம் |

சில கிரகங்களுக்கு இரண்டு ஆட்சிவீடுகள் உள. ராகு, கேது என்பவற்றுக்கு ஆட்சிவீடுகள் இல்லை என்பர்.

<table>
<tr><td>வியாழன்</td><td>செவ்வாய்</td><td>வெள்ளி</td><td>புதன்</td></tr>
<tr><td>சனி</td><td colspan="2" rowspan="2">ஆட்சிவீடு</td><td>சந்திரன்</td></tr>
<tr><td>சனி</td><td>சூரியன்</td></tr>
<tr><td>வியாழன்</td><td>செவ்வாய்</td><td>வெள்ளி</td><td>புதன்</td></tr>
</table>

ஆட்சி வீட்டில் கிரக பலம் அதிகம்

## 1.12 நட்பு வீடுகள்

| கிரகம் | - | நட்புவீடு (இராசி) |
|---|---|---|
| *1. சூரியன்* | - | *கடகம்<br>விருச்சிகம்<br>தனுசு<br>மீனம்* |
| *2. சந்திரன்* | - | *மிதுனம்<br>சிங்கம்<br>கன்னி* |
| *3. செவ்வாய்* | - | *சிங்கம்<br>தனுசு<br>மீனம்* |
| *4. புதன்* | - | *இடபம்<br>சிங்கம்<br>துலாம்* |
| *5. வியாழன்* | - | *மேடம்<br>சிங்கம்<br>கன்னி<br>விருச்சிகம்* |
| *6. வெள்ளி* | - | *மிதுனம்<br>மகரம்<br>கும்பம்<br>தனுசு* |
| *7. சனி* | - | *இடபம்<br>மிதுனம்* |
| *8. இராகு* | - | *மிதுனம்<br>கன்னி<br>துலாம்* |
| *9. கேது* | - | *தனுசு<br>மகரம்<br>மீனம்* |

| | | | |
|---|---|---|---|
| சூரியன்<br>செவ்வாய்<br>இராகு/கேது | வியாழன் | புதன்<br>சனி | சந்திரன்<br>சனி<br>வெள்ளி<br>இராகு/கேது |
| வெள்ளி<br>இராகு/கேது | நட்புவீடு | | சூரியன் |
| வெள்ளி | | | சந்திரன்<br>புதன்<br>செவ்வாய்<br>வியாழன் |
| சூரியன்<br>செவ்வாய்<br>வெள்ளி | சூரியன்<br>வியாழன் | புதன்<br>இராகு/கேது | சந்திரன்<br>வியாழன்<br>இராகு/கேது |

## 1.13 உச்ச வீடுகள்

| | கிரகம் | | உச்சவீடு (இராசி) |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | மேடம் |
| 2. | சந்திரன் | - | இடபம் |
| 3. | செவ்வாய் | - | மகரம் |
| 4. | புதன் | - | கன்னி |
| 5. | வியாழன் | - | கடகம் |
| 6. | வெள்ளி | - | மீனம் |
| 7. | சனி | - | துலாம் |
| 8. | ராகு/கேது | - | விருச்சிகம் |

உச்ச வீட்டில் கிரகவலிமை மிக அதிகம்

| | | | |
|---|---|---|---|
| வெள்ளி | சூரியன் | சந்திரன் | — |
| — | உச்சவீடு | | வியாழன் |
| செவ்வாய் | | | — |
| — | ராகு/கேது | சனி | புதன் |

## 1.14 பகை வீடுகள்

| கிரகம் | - | பகைவீடு (இராசி) |
|---|---|---|
| 1. சூரியன் | - | இடபம் |
| | - | மகரம் |
| | - | கும்பம் |
| 2. சந்திரன் | - | * பகைவீடு இல்லை |
| 3. செவ்வாய் | - | மிதுனம் |
| | | கன்னி |
| 4. புதன் | - | கடகம் |
| 5. வியாழன் | - | இடபம் |
| | | மிதுனம் |
| | | துலாம் |
| | | கடகம் |
| 6. வெள்ளி | - | சிங்கம் |
| 7. சனி | - | கடகம் |
| | | சிங்கம் |
| | | விருச்சிகம் |
| 8. ராகு/கேது | | மேடம் |
| | | கடகம் |
| | | சிங்கம் |
| | | கும்பம் |

* **குறிப்பு:** *கிரகங்களின் நட்பு, பகை வீடுகள் பற்றி மாறுபட்ட கருத்துகள் உண்டு.*

பகை வீட்டில் கிரக வலிமை குறைவு

## 1.15 நீச வீடுகள்

| | கிரகம் | | நீசவீடு (இராசி) |
|---|---|---|---|
| *1.* | *சூரியன்* | - | *துலாம்* |
| *2.* | *சந்திரன்* | - | *விருச்சிகம்* |
| *3.* | *செவ்வாய்* | - | *கடகம்* |
| *4.* | *புதன்* | - | *மீனம்* |
| *5.* | *வியாழன்* | - | *மகரம்* |
| *6.* | *வெள்ளி* | - | *கன்னி* |
| *7.* | *சனி* | - | *மேடம்* |
| *8.* | *ராகு / கேது* | - | *இடபம்* |

*உச்சவீட்டுக்கு 7 ஆவது ஸ்தானம் நீசவீடாகும்.*

நீச வீட்டில் கிரக வலிமை மிகமிகக்குறைவு

| | | | |
|---|---|---|---|
| **புதன்** | **சனி** | **ராகு/கேது** | **—** |
| **—** | **நீசவீடு** | | **செவ்வாய்** |
| **வியாழன்** | | | **—** |
| **—** | **சந்திரன்** | **சூரியன்** | **வெள்ளி** |

## 1.16 கிரக சஞ்சாரம்

கிரகங்கள் எப்பொழுதும் வலஞ்சுழியாகவே சஞ்சரிக்கின்றன. அதாவது மேடம் → இடபம் → மிதுனம்... என்ற ஒழுங்கில்.

ஆனால் ராகு, கேது ஆகிய இரண்டு கிரகங்களும் இடஞ்சுழியாக அதாவது மேடம் → மீனம் → கும்பம்... என்ற ஒழுங்கில் சஞ்சரிக்கின்றன. இவற்றைச் **சாயாக் கிரகங்கள்** என்பர்.

கிரகங்கள் ஒவ்வொரு இராசியிலும் குறிப்பிட்ட கால அளவிற்குச் சஞ்சரிக்கின்றன. குறிப்பிட்ட கால அளவு முடிந்ததும் அடுத்த இராசியில் சஞ்சாரம் செய்கின்றன.

| | கிரகம் | | ஓர் இராசியிற் சஞ்சரிக்கும் கால அளவு |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | 1 மாதம் |
| 2. | சந்திரன் | - | 2¼ நாள் |
| 3. | செவ்வாய் | - | 1½மாதங்கள் |
| 4. | புதன் | - | 1 மாதம் |
| 5. | வியாழன் | - | 1 வருடம் |
| 6. | வெள்ளி | - | 1 மாதம் |
| 7. | சனி | - | 2½ வருடங்கள் |
| 8. | ராகு | - | 1½ வருடங்கள் |
| 9. | கேது | - | 1½ வருடங்கள் |

## 1.17 சுப – அசுபக்கிரகங்கள்

கிரகங்களிற் சில சுபக்கிரகங்கள் என்றும் சில அசுபக் கிரகங்கள் (பாபக்கிரகங்கள்) என்றும் கூறப் படுகின்றன.

**சுபக்கிரகங்களாவன**

1. சந்திரன் (வளர் பிறைச் சந்திரன்)
2. புதன் (பாபக்கிரகத்துடன் சேராத புதன்)
3. வியாழன்
4. வெள்ளி

**அசுபக்கிரகங்களாவன:**

1. சூரியன்
2. செவ்வாய்
3. சனி
4. ராகு
5. கேது
6. தேய்பிறைச் சந்திரன்
7. பாபக் கிரகங்களுடன் சேர்ந்த புதன்

## 1.18 கிரக சத்துரு மித்துருக்கள்

கிரகங்களுக்கிடையே நட்பு, பகை என்பன வுள்ளது. நட்புக் கிரகங்களை, '**மித்துருக்கள்**' என்றும் பகைக் கிரகங்களை, '**சத்துருக்கிரகங்கள்**' என்றும் அழைப்பர்.

**நட்புக் கிரகங்கள்**

| | கிரகம் | நட்பு |
|---|---|---|
| 1. | சூரியன் | செவ்வாய், சந்திரன், வியாழன் |
| 2. | சந்திரன் | சூரியன், புதன் |
| 3. | செவ்வாய் | சூரியன், சந்திரன், வியாழன் |
| 4. | புதன் | சந்திரன், சூரியன் |
| 5. | வியாழன் | சூரியன், சந்திரன், செவ்வாய் |
| 6. | வெள்ளி | புதன், இராகு, கேது, சனி |
| 7. | சனி | வெள்ளி, புதன், இராகு, கேது |
| 8. | இராகு/கேது | சனி, வெள்ளி |

**பகைக் கிரகங்கள்**

| | கிரகம் | பகை |
|---|---|---|
| 1. | சூரியன் | வெள்ளி, சனி, இராகு, கேது |
| 2. | சந்திரன் | இராகு, கேது |
| 3. | செவ்வாய் | புதன், இராகு, கேது |
| 4. | புதன் | சனி |
| 5. | வியாழன் | வெள்ளி |
| 6. | வெள்ளி | புதன் |
| 7. | சனி | சூரியன், சந்திரன் |
| 8. | இராகு/கேது | சூரியன், சந்திரன், செவ்வாய் |

## வேறு

**நட்புக் கிரகங்களாவன:**

| | **கிரகம்** | | **நட்பு** |
|---|---|---|---|
| *1.* | *சூரியன்* | - | *வியாழன்* |
| *2.* | *சந்திரன்* | - | *புதன், வியாழன்* |
| *3.* | *செவ்வாய்* | - | *புதன், வெள்ளி* |
| *4.* | *புதன்* | - | *சந்திரன், வியாழன், செவ்வாய் வெள்ளி, சனி* |
| *5.* | *வியாழன்* | - | *சூரியன், சந்திரன், புதன், வெள்ளி, சனி* |
| *6.* | *வெள்ளி* | - | *புதன், செவ்வாய், வியாழன், சனி* |
| *7.* | *சனி* | - | *புதன், வியாழன், வெள்ளி* |

**பகைக் கிரகங்களாவன:**

| | **கிரகம்** | | **பகை** |
|---|---|---|---|
| *1.* | *சூரியன்* | - | *சந்திரன், செவ்வாய், புதன், வெள்ளி, சனி* |
| *2.* | *சந்திரன்* | - | *சூரியன், செவ்வாய், வெள்ளி, சனி* |
| *3.* | *செவ்வாய்* | - | *சூரியன், சந்திரன், வியாழன், சனி* |
| *4.* | *புதன்* | - | *சூரியன்* |
| *5.* | *வியாழன்* | - | *செவ்வாய்* |
| *6.* | *வெள்ளி* | - | *சூரியன், சந்திரன்* |
| *7.* | *சனி* | - | *சூரியன், சந்திரன், செவ்வாய்.* |

## 1.19 கிரக வலிமை

கிரகங்கள் ஒன்றிலும் மற்றது பலத்தில் வேறுபட்டுக் காணப்படும். எவ்விதமெனில்

1. புதனிலும் செவ்வாய் வலிமையானது.
2. செவ்வாயிலும் சனி வலிமையானது.
3. சனியிலும் வியாழன் வலிமையானது.
4. வியாழனிலும் வெள்ளி வலிமையானது.
5. வெள்ளியிலும் சந்திரன் வலிமையானது.
6. சந்திரனிலும் சூரியன் வலிமையானது.

மேலும் கிரகங்கள் குறிப்பிட்ட இடங்களில் அமையும் போது வலிமை மிக்கவையாக விளங்குகின்றன. உ+ம்

| | கிரகம் | | பலம்பெறும் இடம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | 10 ஆம் இடத்தில் |
| 2. | சந்திரன் | - | 4 ஆம் இடத்தில் |
| 3. | செவ்வாய் | - | 10 ஆம் இடத்தில் |
| 4. | புதன் | - | இலக்கினத்தில் |
| 5. | வியாழன் | - | இலக்கினத்தில் |
| 6. | வெள்ளி | - | நாலாம் இடத்தில் |
| 7. | சனி | - | 7ஆம் இடத்தில் |

## 1.20 கிரகங்களின் பார்வை

கிரகங்கள் ஒவ்வொன்றிற்கும் பார்வை (திருஷ்டி) உள்ளது. பொதுவாக எல்லாக் கிரகங்களுமே தான் உள்ள இடத்திலிருந்து 7 ஆம் இடத்தை (வீட்டை)ப் பார்க்கும். சில கிரகங்களுக்குச் சிறப்பான பார்வையும் உண்டு.

| | கிரகம் | | பார்வை |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | 7 ஆம் பார்வை. |
| 2. | சந்திரன் | - | 7 ஆம் பார்வை. |
| 3. | புதன் | - | 7 ஆம் பார்வை. |
| 4. | வெள்ளி | - | 7 ஆம் பார்வை. |
| 5. | செவ்வாய் | - | 4, 7, 8 ஆம் பார்வைகள். |
| 6. | சனி | - | 3, 7,10 ஆம் பார்வைகள். |
| 7. | வியாழன் | - | 5, 7,9 ஆம் பார்வைகள். |

செவ்வாய், சனி, வியாழன் ஆகிய மூன்றிற்கும் சிறப்புப் பார்வைகளுள.

## 1.21 கிரக காரகர்கள்

| | கிரகம் | | காரகதத்துவம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | தகப்பனார் (பிதுர்காரகர்) |
| 2. | சந்திரன் | - | தாயார் (மாதுருகாரகர்) |
| 3. | செவ்வாய் | - | சகோதரர் (சகோதரகாரகர்) |
| 4. | புதன் | - | மாமன், கல்வி (மாதுலகாரகர்) |
| 5. | வியாழன் | - | தனம், புத்தி, புத்திரர் (புத்திரகாரகர்) |

| | | | |
|---|---|---|---|
| 6. | வெள்ளி | - | மணவாழ்க்கை (களத்திரகாரகர்) |
| 7. | சனி | - | ஆயுள் (ஆயுள்காரகர்) |
| 8. | ராகு | - | வைராக்கியம், பிணி (வைராக் கியகாரகர்) |
| 9. | கேது | - | மோட்சம், ஞானம் (ஞானமோட்ச காரகர்) |

அதாவது ஜாதகனின் தந்தையைப் பற்றி சூரியனைக் கொண்டும், தாயைப்பற்றி சந்திரனைக் கொண்டும், சகோதரரைப் பற்றி செவ்வாயைக் கொண்டும், பிள்ளைகள், பணம், தொழில், இலாபம் இவற்றைப் பற்றி வியாழனைக் கொண்டும், ஆயுள், செலவு, சத்துருக்கள் பற்றி சனியைக் கொண்டும் அறியலாம் என்பதாம்.

## 1.22 கிரக அங்கம்

| | கிரகம் | | அங்கம் |
|---|---|---|---|
| 1. | செவ்வாய் | - | தலை |
| 2. | சுக்கிரன் | - | முகம் |
| 3. | புதன் | - | கழுத்து |
| 4. | சந்திரன் | - | தோள் |
| 5. | சூரியன் | - | மார்பு |
| 6. | வியாழன் | - | வயிறு |
| 7. | சனி | - | தொடை |
| 8. | ராகு | - | முழங்கால் |
| 9. | கேது | - | உள்ளங்கால் |

## 1.23 கேந்திர ஸ்தானம் முதலியன

லக்கினத்துக்கு 1,4,7,10 ஆம் இடங்கள் கேந்திர ஸ்தானங்கள் எனப்படும்.

**திரிகோணஸ்தானம்**

இலக்கினத்துக்கு 1,5,9 ஆம் வீடுகள் திரிகோண ஸ்தானங்கள் எனப்படும்.

**பணபர ஸ்தானங்கள்**

2,5,8.11 ஆம் இடங்கள் பணபர ஸ்தானங்கள் எனப்படும்.

**மறைவு ஸ்தானம்:**

இலக்கினத்துக்கு 3, 6, 8, 12 ஆம் இடங்கள் மறைவு ஸ்தானம் எனப்படும். சுக்கிரனுக்கு மட்டும் 12 ஆம் இடம் மறைவு ஸ்தானமல்ல.

## 1.24 இலக்கினம் (லக்கினம்)

ஒருவர் பிறந்த நேரத்தில் பன்னிரு இராசிகளில் எந்த இராசி உதயமாகி நின்றதோ அது அவரின் இலக்கினமாகும். இதனை உதய லக்கினம் அல்லது ஜன்ம லக்கினம் என்று கூறுவர். ஒருவருடைய ஜாதகத்தில் 'ல' என்ற எழுத்தால் இது குறிக்கப் பட்டிருக்கும்.

இலக்கினம் என்பது ஒருவரின் ஜாதகம் அல்லது இராசிச் சக்கரத்தில் முதலாம் வீடு / முதலாம் பாவம் என்று குறிக்கப்படும். அதாவது இலக்கினமே முதலாம் வீடாகும். அதற்கு அடுத்த இராசி (வீடு) இரண்டாம்

வீடு / இரண்டாம் பாவம் என்றும் அதற்கு அடுத்த இராசி மூன்றாம் வீடு / மூன்றாம் பாவம் என்றும்... இவ்வாறு 12ஆம் வீடு வரை குறிக்கப்படும். ஜாதகத்தில் இவை இலக்கங்களால் குறிக்கப்பட்டிருக்கும்.

**சந்திர லக்கினம்**

ஒருவரின் பிறந்த நட்சத்திரம் (ஜன்ம நட்சத்திரம்) எத்தனையாவது பாதத்திலுள்ளது என்பதைப் பொறுத்து அவரின் இராசி சந்திரனால் குறிப்பிடப் படும். அந்த இராசியே அவரின் பிறந்த இராசி / ஜன்மராசி எனப்படும். சந்திரன் நிற்கும் இராசியே சந்திர லக்கினம் எனவும் குறிப்பிடப்படும்.

## 1.25 பன்னிரு பாவங்கள் (துவாதச பாவங்கள்) – I

பாவம் - இடம் - ஸ்தானம் - வீடு என்பவை ஒரு பொருளைக் குறிப்பனவாகும்.

1. இலக்கினம் உள்ள இராசி முதலாம் வீடு எனப்படும். இந்த இராசியின் அதிபதி இலக்கி னாதிபதி என அழைக்கப்படுவர்.

2. இரண்டாம் வீடு வாக்குஸ்தானம், நேத்திர ஸ்தானம் எனப்படும். இவ்விராசியின் அதிபதி வாக்குஸ்தானாதிபதி, நேத்திரஸ்தானாதிபதி, குடும்பஸ்தானாதிபதி, தனாதிபதி என்று அழைக் கப்படுவர்.

3. மூன்றாம் வீடு இளைய சகோதரஸ்தானம். கர்ணஸ்தானம் எனப்படும். இவ்வீட்டதிபதி இளைய சகோதரஸ்தானாதிபதி, வீரியஸ்தானாதி பதி என அழைக்கப்படுவர்.

4. நாலாம் வீடு வித்தியாஸ்தானம், மாதுரு ஸ்தானம் எனப்படும். இவ்வீட்டதிபதி மாதுருஸ்தானாதிபதி, சுகஸ்தானாதிபதி, பூமிஸ்தானாதிபதி, வாகனஸ் தானாதிபதி, மித்திரஸ்தானாதிபதி, வீட்டுஸ்தானா திபதி என்றெல்லாம் அழைக்கப்படுவர்.

5. ஐந்தாம் வீடு புத்திரஸ்தானம், இருதயஸ்தானம் எனப்படும். இவ் வீட்டதிபதி இருதயஸ்தானாதி பதி, புத்திரஸ்தானாதிபதி, புத்திஸ்தானாதிபதி என அழைக்கப்படுவர்.

6. ஆறாம் வீடு ரோகஸ்தானம், சத்துரு ஸ்தானம் எனப்படும். இவ்வீட்டதிபதி சத்துருஸ்தானாதிபதி, ரோகஸ்தானாதிபதி, உதரஸ்தானாதிபதி எனப் படுவர்.

7. ஏழாம் வீடு களத்திர ஸ்தானம் எனப்படும். இவ்வீட்டதிபதி களத்திரஸ்தானாதிபதி, மர்ம ஸ்தானாதிபதி எனப்படுவர்.

8. எட்டாம் வீடு ஆயுள் ஸ்தானம் எனப்படும். ஆயுள் ஸ்தானாதிபதி, அட்டமஸ்தானாதிபதி, மரண ஸ்தானாதிபதி, நோய்ஸ்தானாதிபதி எனப் படுவர்.

9. ஒன்பதாம் வீடு பாக்கிய ஸ்தானம், தர்மஸ்தானம் எனப்படும். இவ்வீட்டதிபதி பாக்கியஸ்தானாதி பதி, தர்ம ஸ்தானாதிபதி, பிதுருஸ்தானாதிபதி எனப்படுவர்.

10. பத்தாம் வீடு தொழில் ஸ்தானம், கர்மஸ்தானம் எனப்படும். இவ்வீட்டதிபதி கர்மஸ்தானாதிபதி, தொழில் ஸ்தானாதிபதி எனப்படுவர்.

11. பதினொராம் வீடு இலாபஸ்தானம், மூத்த சகோதரஸ்தானம் எனப்படும். இவ்வீட்டதிபதி இலாபஸ்தானாதிபதி, மூத்த சகோதர ஸ்தானாதி பதி எனப்படுவர்.

12. பன்னிரண்டாம் வீடு விரயஸ்தானம் எனப்படும் இவ்வீட்டதிபதி விரயஸ்தானாதிபதி, செலவு ஸ்தானாதிபதி, சயனஸ்தானதிபதி, கீர்த்தி ஸ்தானாதிபதி எனப்படுவர்.

| | | | |
|---|---|---|---|
| விரயம் 12 | லக்கினம் 1 | குடும்பம் 2 | சகோதரம் 3 |
| லாபம் 11 | துவாதச பாவங்கள் | | தாய் 4 |
| தொழில் 10 | | | புத்திரர் மாமன் 5 |
| தந்தை 9 | ஆயுள் 8 | களத்திரம் 7 | சத்துரு நோய் 6 |

## 1.26 பன்னிரு பாவங்கள் - II

பன்னிரு வீட்டிலிருந்தும் அறியக்கூடிய விடயங் கள் வருமாறு:

1. முதலாம் வீடு - ஜாதகரின் **தேகம்,** தோற்றம், நடத்தை, வாழ்க்கைத்தரம், புகழ்

2. இரண்டாம் வீடு - முகம், வலதுகண், வாக்கு, கல்வி, கழுத்து, பொருளாதாரம், குடும்பம், உணவு

3. மூன்றாம் வீடு - சகோதரம், தைரியம். வெற்றி, அன்பு, காது

4. நான்காம் வீடு - தாயின் நிலை, கல்வி, நண்பர்கள், பூமி, வீடு, வாகனம், மனம், புயம்.

5. ஐந்தாம் வீடு - பிள்ளைகளின் நிலை, இருதயம், புத்தி, பேரன், பூர்வபுண்ணியம்.

6. ஆறாம்வீடு - நோய், வயிறு, பகைவர்கள், கடன், சிறை, தாயின் தாய், பயம்.

7. ஏழாம் வீடு - காதல், திருமணம், மனைவி, இல்லற இன்பம், நித்திரை, பங்காளி

8. எட்டாம் வீடு - ஆயுள், தீராத நோய்கள் மரணம், மாங்கல்யம், மானபங்கம்.

9. ஒன்பதாம் வீடு - தந்தையின் நிலை, பரம்பரை, வெளிநாட்டுப்பயணம், தர்மம், பேரப்பிள்ளை, பாக்கியம்,

10. பத்தாம் வீடு - வேலை, செல்வநிலை, சுயமரியாதை, புகழ்

11. பதினொராம் வீடு - இலாபம், மூத்தசகோதரர், துக்கத்திலிருந்து மீள்தல்.

12. பன்னிரண்டாம் வீடு - செலவு, இடதுகண்,

| | | | |
|---|---|---|---|
| **12 ஆம் வீடு**<br>* செலவு<br>* இடதுகண்<br>* மோட்சம் | **இலக்கினம்**<br>* தேகம்<br>* தோற்றம்<br>* நடத்தை<br>* வாழ்க்கைத் தரம்<br>* புகழ் | **2 ஆம் வீடு**<br>* முகம்<br>* வலதுகண்<br>* வாக்கு<br>* கல்வி<br>* கழுத்து<br>* பொருளாதாரம்<br>* குடும்பம் | **3 ஆம் வீடு**<br>* சகோதரம்<br>* தைரியம்<br>* வெற்றி<br>* அன்பு<br>* காது |
| **11 ஆம் வீடு**<br>* இலாபம்<br>* மூத்த சகோதரர்<br>* துக்கமீட்சி | துவாதச பாவங்கள் - II | | **4 ஆம் வீடு**<br>* தாய்<br>* கல்வி<br>* நண்பர்கள்<br>* பூமி, வீடு<br>* வாகனம்<br>* புயம் |
| **10 ஆம் வீடு**<br>* வேலை<br>* செல்வநிலை<br>* சுயமரியாதை<br>* புகழ் | | | **5 ஆம் வீடு**<br>* பிள்ளைகள்<br>* இருதயம்<br>* புத்தி<br>* பேரன்<br>* பூர்வபுண்ணியம் |
| **9 ஆம் வீடு**<br>* தந்தையின் நிலை<br>* பரம்பரை<br>* வெளிநாட்டுப் பயணம்<br>* பேரப்பிள்ளை<br>* தர்மம் | **8 ஆம் வீடு**<br>* ஆயுள்<br>* தீராத நோய்கள்<br>* மரணம்<br>* மாங்கல்யம்<br>* மானபங்கம் | **7 ஆம் வீடு**<br>* காதல்<br>* திருமணம்<br>* மனைவி<br>* இல்லற இன்பம்<br>* நித்திரை<br>* பிறப்புறுப்புகள் | **6 ஆம் வீடு**<br>* நோய்<br>* வயிறு<br>* பகைவர்கள்<br>* கடன்<br>* சிறை<br>* தாயின்தாய்<br>* பயம் |

## 1.27 திசாபுத்தி

ஒருவர் பிறக்கும் போது எந்தத் திசா புத்தியில் பிறந்துள்ளார் என்பதை அவரது ஜாதகத்தில் கட்டாயம் குறித்திருப்பர். அதை அடிப்படையாகக் கொண்டு அவரின் தற்போதைய திசை, புத்தி என்ன என்பதை கணித்துக் கொண்டு பலன்களை ஆராயலாம். அதன் மூலம் அவருக்கு ஏற்பட்ட, ஏற்படக்கூடிய நோய்களைக் கண்டறிந்து ஏற்ற பரிகாரங்களைச் செய்து கொள்ள முடியும்.

ஒருவர் பிறக்கும் போது எந்தத் திசையில் பிறக்கிறார் என்பதை பின்வரும் அட்டவணை மூலம் அறிந்து கொள்ளலாம். இதற்கு அவரின் நட்சத்திரம் தெரிந்திருத்தல் வேண்டும்.

# மகாதசாபுக்தியும், அதன் சங்கியையும்

| தசை | புக்தி | ஆண்டு | மாதம் | நாள் | ஆண்டு | மாதம் | நாள் | தசை | புக்தி | ஆண்டு | மாதம் | நாள் | ஆண்டு | மாதம் | நாள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கார்த்திகை - உத்தரம் உத்தராடம் **சூரியதசை வருடம் 6** | சூரிய | 0 | 3 | 18 | 0 | 3 | 18 | பூசம் - அனுஷம் உத்தரட்டாதி **சனிதசை வருடம் 19** | சனி | 3 | 0 | 3 | 3 | 0 | 3 |
| | சந்திர | 0 | 6 | 0 | 0 | 9 | 18 | | புதன் | 2 | 8 | 9 | 5 | 8 | 12 |
| | குஜன் | 0 | 4 | 6 | 1 | 1 | 24 | | கேது | 1 | 1 | 9 | 6 | 9 | 21 |
| | ராகு | 0 | 10 | 24 | 2 | 0 | 18 | | சுக்ர | 3 | 2 | 0 | 9 | 11 | 21 |
| | குரு | 0 | 9 | 18 | 2 | 10 | 6 | | சூரிய | 0 | 11 | 12 | 10 | 11 | 3 |
| | சனி | 0 | 11 | 12 | 3 | 9 | 18 | | சந்திர | 1 | 7 | 0 | 12 | 6 | 3 |
| | புதன் | 0 | 10 | 6 | 4 | 7 | 24 | | குஜன் | 1 | 1 | 9 | 13 | 7 | 12 |
| | கேது | 0 | 4 | 6 | 5 | 0 | 0 | | ராகு | 2 | 10 | 6 | 16 | 5 | 18 |
| | சுக்ர | 1 | 0 | 0 | 6 | 0 | 0 | | குரு | 2 | 6 | 12 | 19 | 0 | 0 |
| ரோகிணி - அத்தம் திருவோணம் **சந்திரதசை வருடம் 10** | சந்தி | 0 | 10 | 0 | 0 | 10 | 0 | ஆயில்யம் - கேட்டை ரேவதி **புதன்தசை வருடம் 17** | புதன் | 2 | 4 | 27 | 2 | 4 | 27 |
| | குஜன் | 0 | 7 | 0 | 1 | 5 | 0 | | கேது | 0 | 11 | 27 | 3 | 4 | 24 |
| | ராகு | 1 | 6 | 0 | 2 | 11 | 0 | | சுக்ர | 2 | 10 | 0 | 6 | 2 | 24 |
| | குரு | 1 | 4 | 0 | 4 | 3 | 0 | | சூரிய | 0 | 10 | 6 | 7 | 1 | 0 |
| | சனி | 1 | 7 | 0 | 5 | 10 | 0 | | சந்திர | 1 | 5 | 0 | 8 | 6 | 0 |
| | புதன் | 1 | 5 | 0 | 7 | 3 | 0 | | குஜன் | 0 | 11 | 27 | 9 | 5 | 27 |
| | கேது | 0 | 7 | 0 | 7 | 10 | 0 | | ராகு | 2 | 6 | 18 | 12 | 0 | 15 |
| | சுக்ர | 1 | 8 | 0 | 9 | 6 | 0 | | குரு | 2 | 3 | 6 | 14 | 3 | 21 |
| | சூரிய | 0 | 6 | 0 | 10 | 0 | 0 | | சனி | 2 | 8 | 9 | 17 | 0 | 0 |
| மிருகசீரிட - சித்திரை அவிட்டம் **குஜதசை வருடம் 7** | குஜன் | 0 | 4 | 27 | 0 | 4 | 27 | அசுவினி - மகம் மூலம் **கேதுதசை வருடம் 7** | கேது | 0 | 4 | 27 | 0 | 4 | 27 |
| | ராகு | 1 | 0 | 18 | 1 | 5 | 15 | | சுக்ர | 1 | 2 | 0 | 1 | 6 | 27 |
| | குரு | 0 | 11 | 6 | 2 | 4 | 21 | | சூரிய | 0 | 4 | 6 | 1 | 11 | 3 |
| | சனி | 1 | 1 | 9 | 3 | 6 | 0 | | சந்திர | 0 | 7 | 0 | 2 | 6 | 3 |
| | புதன் | 0 | 11 | 27 | 4 | 5 | 27 | | குஜன் | 0 | 4 | 27 | 2 | 11 | 0 |
| | கேது | 0 | 4 | 27 | 4 | 10 | 24 | | ராகு | 1 | 0 | 18 | 3 | 11 | 18 |
| | சுக்ர | 1 | 2 | 0 | 6 | 0 | 24 | | குரு | 0 | 11 | 6 | 4 | 10 | 24 |
| | சூரிய | 0 | 4 | 6 | 6 | 5 | 0 | | சனி | 1 | 1 | 9 | 6 | 0 | 3 |
| | சந்திர | 0 | 7 | 0 | 7 | 0 | 0 | | புதன் | 0 | 11 | 27 | 7 | 0 | 0 |
| திருவாதிரை - சுவாதி சதயம் **ராகுதசை வருடம் 18** | ராகு | 2 | 8 | 12 | 2 | 8 | 12 | பரணி - பூரம் பூராடம் **சுக்கிரதசை வருடம் 20** | சுக்ர | 3 | 4 | 0 | 3 | 4 | 0 |
| | குரு | 2 | 12 | 24 | 5 | 1 | 6 | | சூரிய | 1 | 0 | 0 | 4 | 4 | 0 |
| | சனி | 2 | 10 | 6 | 7 | 11 | 12 | | சந்திர | 1 | 8 | 0 | 6 | 0 | 0 |
| | புதன் | 2 | 6 | 18 | 10 | 6 | 0 | | குஜன் | 1 | 2 | 0 | 7 | 2 | 0 |
| | கேது | 1 | 0 | 18 | 11 | 6 | 18 | | ராகு | 3 | 0 | 0 | 10 | 2 | 0 |
| | சுக்ர | 3 | 0 | 0 | 14 | 6 | 18 | | குரு | 2 | 8 | 0 | 12 | 10 | 0 |
| | சூரிய | 0 | 10 | 24 | 15 | 5 | 12 | | சனி | 3 | 2 | 0 | 16 | 0 | 0 |
| | சந்திர | 1 | 6 | 0 | 16 | 11 | 12 | | புதன் | 2 | 10 | 0 | 18 | 10 | 0 |
| | குஜன் | 1 | 0 | 18 | 18 | 0 | 0 | | கேது | 1 | 2 | 0 | 20 | 0 | 0 |
| புனர்பூசம் - விசாகம் பூரட்டாதி **குருதசை வருடம் 16** | குரு | 2 | 1 | 18 | 2 | 1 | 18 | | | | | | | | |
| | சனி | 2 | 6 | 12 | 4 | 8 | 0 | | | | | | | | |
| | புதன் | 2 | 3 | 6 | 6 | 11 | 6 | | | | | | | | |
| | கேது | 0 | 11 | 6 | 7 | 10 | 12 | | | | | | | | |
| | சுக்ர | 2 | 8 | 0 | 10 | 6 | 12 | | | | | | | | |
| | சூரிய | 0 | 9 | 18 | 11 | 4 | 0 | | | | | | | | |
| | சந்திர | 1 | 4 | 0 | 12 | 8 | 0 | | | | | | | | |
| | குஜன் | 0 | 11 | 6 | 13 | 7 | 6 | | | | | | | | |
| | ராகு | 2 | 4 | 24 | 16 | 0 | 0 | | | | | | | | |

**ஜனககால தசையிருப்புக்காண:-**

ஜன்மநக்ஷத்திரத்தில் எஞ்சிநின்ற நாழிகையை அந்நக்ஷத்திர தசாவருஷ சங்கியையாற் பெருக்கி அந்நக்ஷத்திர பரம நாழிகையாற் பிரிக்க வருவது, செல்லாது நின்றவருஷமாம். சேஷத்தை முறை யே 12,30 - ஆற் பெருக்கி பரமநாழிகையாற் பிரிக்க வருவது மாதம் நாள் ஆகும்.

# பகுதி - II

2.01 கிரக தத்துவம், தன்மை

2.02 கிரக அதிதேவதைகள்

2.03 கிரக குணம்

2.04 கிரகங்களின் திக்கு

2.05 கிரக நிறம்

2.06 கிரகங்களும் பஞ்சபூதங்களும்

2.07 கிரகங்களின் ஐம்பூதக் கூறுபாடுகள்

2.08 கிரக வடிவம் அமைப்பு உடலின் உறுப்புகள்

2.09 கிரகங்களும் உடற்கட்டுகளும்

2.10. கிரகங்களும் சுவையும்

2.11. கிரகங்களும் ஐம்பொறி தன்மாத்திரை புலன்களும்

2.12. கிரகங்களும் கன்மேந்திரியங்களும்

2.13. கிரகங்களும் கோசங்களும்

2.14. கிரகங்களும் ஆறாதாரங்களும்

2.15. கிரக இரத்தினங்களும் உலோகங்களும்

2.16. கிரக தானியம் நைவேத்தியம்

2.17. கிரக சமித்து – தூபதீபம் – புஷ்பம்

2.18. கிரக நாடிகள்

2.19. கோள்களும் மனிதனும்

## 2.01 கிரக தத்துவம் (ஆண்/ பெண்/அலி), தன்மை

| | கிரகம் | தத்துவம் | தன்மை |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - ஆண் | - ஸ்திரக்கிரகம் |
| 2. | சந்திரன் | - பெண் | - சரக்கிரகம் |
| 3. | செவ்வாய் | - ஆண் | - சரக்கிரகம் |
| 4. | புதன் | - அலி | - உபயக்கிரகம் |
| 5. | வியாழன் | - ஆண் | - உபயக்கிரகம் |
| 6. | வெள்ளி | - பெண் | - ஸ்திரக்கிரகம் |
| 7. | சனி | - அலி | - உபயக்கிரகம் |
| 8. | இராகு | - பெண் | - சரக்கிரகம் |
| 9. | கேது | - அலி | - சரக்கிரகம் |

## 2.02 கிரக அதிதேவதைகள்

| | கிரகம் | அதிதேவதை |
|---|---|---|
| 1. | சூரியன் | - சிவன் |
| 2. | சந்திரன் | - பார்வதி |
| 3. | செவ்வாய் | - சுப்பிரமணியர் |
| 4. | புதன் | - விஷ்ணு |
| 5. | வியாழன் | - பிரம்மா, தட்சணாமூர்த்தி |
| 6. | வெள்ளி | - இலட்சுமி, இந்திரன், வருணன் |
| 7. | சனி | - யமன் |
| 8. | இராகு | - காளி,துர்க்கா, கருமாரியம்மன் |
| 9. | கேது | - விநாயகர், சண்டிகேசுவரர் |

## 2.03 கிரக குணம்

| | கிரகம் | | குணம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | இரஜோகுணம் |
| 2. | சந்திரன் | - | சத்துவம் |
| 3. | செவ்வாய் | - | இரஜோகுணம் |
| 4. | புதன் | - | தாமசம் |
| 5. | வியாழன் | - | சத்துவம் |
| 6. | வெள்ளி | - | இரஜோகுணம் |
| 7. | சனி | - | தாமசம் |
| 8. | இராகு | - | தாமசம் |
| 9. | கேது | - | தாமசம் |

## 2.04 கிரகங்களின் திக்கு

| | கிரகம் | | திக்கு |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | கிழக்கு |
| 2. | சந்திரன் | - | வடமேற்கு (வாயுமூலை) |
| 3. | செவ்வாய் | - | தெற்கு |
| 4. | புதன் | - | வடக்கு |
| 5. | வியாழன் | - | வடகிழக்கு (ஈசானமூலை) |
| 6. | வெள்ளி | - | தென்கிழக்கு (ஆக்னேய மூலை) |
| 7. | சனி | - | மேற்கு |
| 8. | இராகு | - | தென்மேற்கு |
| 9. | கேது | - | வடமேற்கு |

## 2.05 கிரக நிறம்

| | கிரகம் | | நிறம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | அக்கினிநிறம் / செந்நிறம் |
| 2. | சந்திரன் | - | படிக நிறம் |
| 3. | செவ்வாய் | - | இரத்தநிறம் |
| 4. | புதன் | - | பசுமை / பச்சைநிறம் |
| 5. | வியாழன் | - | பொன்னிறம் |
| 6. | வெள்ளி | - | வெண்ணிறம் |
| 7. | சனி | - | கருநிறம் |
| 8. | இராகு | - | கருநிறம் |
| 9. | கேது | - | செந்நிறம் |

## 2.06 கிரகங்களும் பஞ்சபூதங்களும்

| | கிரகம் | | பஞ்சபூதம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | தீ (தேயு) |
| 2. | சந்திரன் | - | நீர் (அப்பு) |
| 3. | செவ்வாய் | - | மண் (பிருதுவி) |
| 4. | புதன் | - | வளி (வாயு) |
| 5. | வியாழன் | - | தீ (தேயு) |
| 6. | வெள்ளி | - | நீர் (அப்பு) |
| 7. | சனி | - | வளி ( வாயு) |
| 8. | இராகு | - | விண் (ஆகாயம்) |
| 9. | கேது | - | விண் (ஆகாயம்) |

## 2.07 கிரகங்களின் ஐம்பூதக் கூறுபாடுகள்

| கிரகம் | | ஐம்பூதக்கூறு |
|---|---|---|
| 1. சூரியன் | - | இறுமாப்பு, மைதுனம், சோம்பல், அச்சம், தூக்கம் |
| 2. சந்திரன் | - | குருதி, கொழுப்பு, வெண்ணீர்(சுக்கிலம்), சிறுநீர், மூளை |
| 3. செவ்வாய் | - | என்பு, தோல், தசை, மயிர் நாடி |
| 4. புதன் | - | ஓடல், இருத்தல், நடத்தல் கிடத்தல், நிற்றல். |
| 5. வியாழன் | - | இறுமாப்பு, மைதுனம், சோம்பல், அச்சம், தூக்கம் |
| 6. வெள்ளி | - | குருதி, கொழுப்பு, வெண்ணீர்(சுக்கிலம்), சிறுநீர், மூளை |
| 7. சனி | - | ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், நிற்றல். |
| 8. இராகு | - | ஆசை, உட்பகை, மோகம், மதம், வஞ்சகம் |
| 9. கேது | - | ஆசை, உட்பகை, மோகம், மதம், வஞ்சகம் |

## 2.08 கிரக வடிவம் – அமைப்பு – உடலின் உறுப்பு

| | கிரகம் | வடிவம் | அமைப்பு | உடலின் உறுப்பு |
|---|---|---|---|---|
| 1. | சூரியன் | சமஉயரம் | - தலை | - தமரகம் (இருதயம்) |
| 2. | சந்திரன் | - குள்ளம் | - முகம், வயிறு | - மூளை |
| 3. | செவ்வாய் | - குள்ளம் | - கை,தோள் | - பித்தப்பை |
| 4. | புதன் | - உயரம் | - கழுத்து | - நுரையீரல் |
| 5. | வியாழன் | - உயரம் | - இருதயம் | - கல்லீரல் |
| 6. | வெள்ளி | - சமஉயரம் | - மர்மஸ்தானம் (பிறப்புறுப்பு) | - சிறுநீரகம் |
| 7. | சனி | - குள்ளம் | - தொடை பாதம் கணுக்கால் | - மண்ணீரல் |
| 8. | இராகு | - உயரம் | - தொடை, பாதம் - கணுக்கால் | |
| 9. | கேது | - உயரம் | - கை, தோள் | |

## 2.09 கிரகங்களும் உடற்கட்டுக்களும்

| | கிரகம் | | உடற்கட்டு |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | கொழுப்பு |
| 2. | சந்திரன் | - | மாமிசம் / ஊன் |
| 3. | செவ்வாய் | - | இரசம் / இரத்தம் |
| 4. | புதன் | - | என்பு, மூளை |
| 5. | வியாழன் | - | கொழுப்பு |
| 6. | வெள்ளி | - | மாமிசம் / ஊன் |
| 7. | சனி | - | சுக்கிலம் |
| 8. | இராகு | - | சுக்கிலம் |
| 9. | கேது | - | சுக்கிலம் |

**வேறு**

| | கிரகம் | | உடற்கட்டு |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | மூளை |
| 2. | சந்திரன் | - | சாரம் |
| 3. | செவ்வாய் | - | செந்நீர் |
| 4. | புதன் | - | ஊன் |
| 5. | வியாழன் | - | கொழுப்பு |
| 6. | வெள்ளி | - | சுக்கிலம் |
| 7. | சனி | - | என்பு |

## 2.10 கிரகங்களும் சுவையும்

| | கிரகம் | | சுவை |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | கார்ப்பு |
| 2. | சந்திரன் | - | இனிப்பு |
| 3. | செவ்வாய் | - | துவர்ப்பு |
| 4. | புதன் | - | உப்பு |
| 5. | வியாழன் | - | இனிப்பு |
| 6. | வெள்ளி | - | இனிப்பு |
| 7. | சனி | - | கைப்பு |
| 8. | இராகு | - | புளிப்பு |
| 9. | கேது | - | புளிப்பு |

## 2.11 கிரகங்களும் ஐம்பொறிகளும் தன்மாத்திரை புலன்களும்

| | கிரகம் | | பொறி | | தன்மாத்திரை | | புலன் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | சூரியன் | - | கண் | - | ரூபம் | - | பார்த்தல். |
| 2. | சந்திரன் | - | நாக்கு | - | இரசம்/சுவை | - | சுவைத்தல். |
| 3. | செவ்வாய் | - | மூக்கு | - | கந்தம்/மணம் | - | மணத்தல். |
| 4. | புதன் | - | மெய் (தோல்) | - | பரிசம் | - | உணர்தல். |
| 5. | வியாழன் | - | கண் | - | ரூபம் | - | பார்த்தல். |
| 6. | வெள்ளி | - | நாக்கு | - | இரசம்/சுவை | - | சுவைத்தல். |
| 7. | சனி | - | செவி | - | சப்தம் | - | கேட்டல். |
| 8. | இராகு | - | செவி | - | சப்தம் | - | கேட்டல் |
| 9. | கேது | - | செவி | - | சப்தம் | - | கேட்டல் |

## 2.12 கிரகங்களும் கன்மேந்திரியங்களும்

| | கிரகம் | | கன்மேந்திரியம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | கை |
| 2. | சந்திரன் | - | எருவாய் / மலவாசல் |
| 3. | செவ்வாய் | - | கருவாய் / யோனி |
| 4. | புதன் | - | கால் |
| 5. | வியாழன் | - | கை |
| 6. | வெள்ளி | - | எருவாய் / மலவாசல் |
| 7. | சனி | - | வாய் |
| 8. | இராகு | - | வாய் |
| 9. | கேது | - | வாய் |

## 2.13 கிரகங்களும் கோசங்களும்

| | கிரகம் | | கோசம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | மனோமய கோசம் |
| 2. | சந்திரன் | - | பிராணமய கோசம் |
| 3. | செவ்வாய் | - | அன்னமயகோசம், பிராணமயகோசம் |
| 4. | புதன் | - | விஞ்ஞானமய கோசம் |
| 5. | வியாழன் | - | மனோமயகோசம் |
| 6. | வெள்ளி | - | பிராணமய கோசம் |
| 7. | சனி | · | ஆனந்தமய கோசம் |
| 8. | இராகு | - | ஆனந்தமய கோசம் |
| 9. | கேது | - | ஆனந்தமய கோசம் |

## 2.14 கிரகங்களும் ஆறாதாரங்களும்

| கிரகம் | - | ஆதாரம் |
|---|---|---|
| 1. சூரியன் | - | அநாகதம் |
| 2. சந்திரன் | - | மணிபூரகம் |
| 3. செவ்வாய் | - | மூலாதாரம், சுவாதிட்டானம் |
| 4. புதன் | - | விசுத்தி |
| 5. வியாழன் | - | அநாகதம் |
| 6. வெள்ளி | - | மணிபூரகம் |
| 7. சனி | - | ஆக்ஞை |
| 8. இராகு | - | ஆக்ஞை |
| 9. கேது | - | ஆக்ஞை |

* வேறு ( படம் பார்க்க பக் - 57)

| கிரகம் | | ஆதாரம் |
|---|---|---|
| 1. சூரியன் | - | ஆக்ஞை |
| 2. சந்திரன் | - | ஆக்ஞை |
| 3. செவ்வாய் | - | மணிபூரகம் |
| 4. புதன் | - | விசுத்தி |
| 5. வியாழன் | - | சுவாதிட்டானம் |
| 6. வெள்ளி | - | அநாகதம் |
| 7. சனி | - | மூலாதாரம் |

## 2.15 கிரக இரத்தினங்களும் உலோகங்களும்

| | கிரகம் | | இரத்தினம் | | உலோகம் |
|---|---|---|---|---|---|
| 1. | சூரியன் | - | மாணிக்கம் | - | தம்பாக்கு (தாமிரம்) |
| 2. | சந்திரன் | - | முத்து | - | ஈயம் |
| 3. | செவ்வாய் | - | பவளம் | - | செம்பு |
| 4. | புதன் | - | மரகதம்/பச்சை | - | பித்தளை |
| 5. | வியாழன் | - | புஷ்பராகம் | - | பொன் |
| 6. | வெள்ளி | - | வைரம் | - | வெள்ளி |
| 7. | சனி | - | நீலம் | - | இரும்பு |
| 8. | இராகு | - | கோமேதகம் | - | கருங்கல் |
| 9. | கேது | - | வைடூரியம் | - | துருக்கல் |

## 2.16 கிரக தானியங்கள்
## (நவதானியங்கள், நைவேத்தியங்கள்)

| | கிரகம் | | தானியம் | | நைவேத்தியம் |
|---|---|---|---|---|---|
| 1. | சூரியன் | - | கோதுமை | - | சர்க்கரைச்சாதம் |
| 2. | சந்திரன் | - | அரிசி | - | பாயாசம் |
| 3. | செவ்வாய் | - | துவரை | - | அன்னம் |
| 4. | புதன் | - | பயறு | - | தயிர்ச்சாதம் |
| 5. | வியாழன் | - | கடலை | - | பாற்சாதம் |
| 6. | வெள்ளி | - | மொச்சை | - | நெய்ச்சாதம் |
| 7. | சனி | - | எள்ளு | - | எள்ளுச்சாதம் |
| 8. | இராகு | - | உழுந்து | - | உழுந்துச்சாதம் |
| 9. | கேது | - | கொள்ளு | - | புளிச்சாதம் |

## 2.17 கிரக சமித்து தூபதீபம்

| | கிரகம் | - சமித்து | - தூபதீபம் | புஷ்பம் |
|---|---|---|---|---|
| 1. | சூரியன் | - எருக்கு | - சந்தனம் | - செந்தாமரை |
| 2. | சந்திரன் | - பலாசு | - சாம்பிராணி | - வெள்ளலரி |
| 3. | செவ்வாய் | - கருங்காலி | - குங்கிலியம் | - சண்பகம் |
| 4. | புதன் | - நாயுருவி | - கர்ப்பூரம் | - வெண்காந்தள் |
| 5. | வியாழன் | - அரசு | - ஆம்பல் | - முல்லை |
| 6. | வெள்ளி | - அத்தி | - இலவங்கம் | - வெண்டாமரை |
| 7. | சனி | - வன்னி | - கருங்காலி | - கருங்குவளை |
| 8. | இராகு | - அறுகு | - கடுகு | - மந்தாரை |
| 9. | கேது | - தர்ப்பை | - செம்மரம் | - செவ்வல்லி |

## 2.18 கிரக நாடிகள்

| | கிரகம் | நாடி | பிணி |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - பித்தநாடி | - பித்தம் |
| 2. | சந்திரன் | - கபநாடி | - கபம் |
| 3. | செவ்வாய் | - பித்தநாடி | - பித்தம் |
| 4. | புதன் | - வாதநாடி | - வாதம் |
| 5. | வியாழன் | - வாதநாடி | - வாதம் |
| 6. | வெள்ளி | - கபநாடி | - கபம் |
| 7. | சனி | - வாதநாடி | - வாதம் |
| 8. | இராகு | - வாதநாடி | - வாதம் |
| 9. | கேது | - பித்தநாடி | - பித்தம் |

## 2.19 கோள்களும் மனிதனும்

மனிதனை பிரகிருதியின் மூலத்திலுண்டாகி, கிரகசம்பந்தமும், உலக சம்பந்தமும் பெற்று, உடம்பிலுள்ள ஏழு தத்துவங்களையும் கொண்ட ஆன்மாவைப் பொருந்தியவனாக சித்தமருத்துவம் கூறுகிறது.

அண்டவெளியிலுள்ள நவகோள்களும் மேடம் முதலான பன்னிரு இராசிகளுள் அடக்கப்படுகின்றன. இந்த ராசி மண்டலமும் அண்டத்திலுள்ளது. பிண்டத் திலுமுள்ளது (பிண்டம் - மனித உடல்) ஒவ்வொரு கிரகமும் சூரியனைச் சுற்றி வந்த வண்ணமுள்ளன. அவ்விதம் சுற்றிவரும்போது தினமும் மேற்படி பன்னிரு இராசி மண்டலங்களினூடாகவும் செல்கின்றன. இங்ஙனம் ஒவ்வொரு கிரகமும் சூரியனைச் சுற்றிவரும் பாதை (Orbit) நேர் (Positive) என்றும் எதிர் (Negative) என்றும் பிரிக்கப்பட்டுள்ளன.

மனித உடலில் பன்னிரு இராசிகளும் கிரகங்களும் அமைந்துள்ள விதம் பற்றி சோதிடநூல்கள் எடுத்துக் கூறியுள்ளன.

மனித உடலானது வலது பாதி - நேர் (ஆண்மை) என்றும், இடதுபாதி - எதிர் (பெண்மை) என்றும் இரு பாதியாகக் கருதப்படுகிறது. சிவபெருமானின் அர்த்தநாரீசுவர தத்துவமும் இதனையே குறிக்கிறது.

இராசிச் சக்கரத்தை நாம் கடகம், சிங்கத்துக்கு இடையிலும், மகரம், கும்பத்துக்கு இடையிலும் , இரண்டாகப் பிரித்தால் மேலுள்ள 6 இராசிகளும் அதாவது மேடம், இடபம், மிதுனம், கடகம், கும்பம், மீனம் எதிர் ஆகவும்,

கீழுள்ள 6 இராசிகளும் அதாவது சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், நேராகவும் கொள் ளப்படும். ( படம் பார்க்க பக்கம் - 57)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | மீனம் வியாழன் | மேடம் செவ்வாய் | இடபம் வெள்ளி | மிதுனம் புதன் | |
| எதிர் | கும்பம் சனி | | | கடகம் சந்திரன் | எதிர் |
| நேர் | மகரம் சனி | | | சிங்கம் சூரியன் | நேர் |
| | தனுசு வியாழன் | விருச்சிகம் செவ்வாய் | துலாம் வெள்ளி | கன்னி புதன் | |

**பன்னிரு இராசிகளும் ஆட்சிக் கிரகங்களும்**

*1.* *இதில் தலையிருந்து மூக்குவரை சிங்கராசி (நேர்), கடகராசி (எதிர்) என்பவற்றால் ஆட்சி செய்யப்படுகிறது. இவற்றில் முறையே சூரியன், சந்திரன் என்பன ஆட்சியுடைய கிரகங்களாகும். (ஸ்தானம் ஆக்ஞை)*

*2.* *வாயிலிருந்து தொண்டைவரை மிதுனராசி(எதிர்) கன்னி ராசி (நேர்) இவற்றில் ஆட்சியுடைய கிரகம் புதனாகும். புதனே வாக்கிற்கு அதிபதி யாகும்.(ஸ்தானம் - விசுத்தி)*

*3.* *தொண்டையிலிருந்து மார்புவரை இடபராசியும் (எதிர்), துலாராசி (நேர்)யும் ஆட்சியுடையன. இவற்றின் ஆட்சிக் கிரகம் வெள்ளியாகும். (ஸ்தானம் - அநாகதம்)*

# கோள்களும் மனிதனும்



4. மார்புக்கும் வயிற்றுக்கும் இடையில் பூமிக்குரிய பாகமாகும்.

5. மேல் வயிற்றுக்கும் கீழ் வயிற்றுக்கும் இடைப் பட்ட பாகம் மேடராசிக்கும் (எதிர்) விருச்சி ராசிக் கும் (நேர்) உரியபாகமாகும். இதில் ஆட்சி யுடைய கிரகம் உணவுக்கும் யுத்தத்துக்கும் அதிபதியான செவ்வாயாகும்.
(ஸ்தானம் - மணிபூரகம்)

6. கீழ்வயிற்றில் மீனராசியும் (எதிர்) தனுசு ராசியும் (நேர்) ஆட்சி செலுத்துகின்றன. இவற்றுக்கு அதிபதி புத்திரகாரகனாகிய வியாழனாகும்.
(ஸ்தானம் - சுவாதிட்டானம்)

7. கீழ்வயிற்றுக்குக் கீழ் கும்பராசி (எதிர்)யும், மகராசியும் (நேர்) ஆதிக்கம் செலுத்துகின்றன. இவற்றுக்கு அதிபதி கர்மத்துக்கு அதிபதியான சனியாகும்.
(ஸ்தானம் - மூலாதாரம்)

இராகு, கேதுவுக்கு தனித்தனி இராசிகள் இல்லை என ஏற்கெனவே பார்த்துள்ளோம்.

**குறிப்பு:**

சித்தமருத்துவர்கள் பகுதி II இன் ஒவ்வொரு பிரிவையும் தொடர்புபடுத்தி ஆராய்வதன் மூலம் இவற்றின் மருத்துவ அடிப்படைத் தத்துவ உண்மை களை நன்கு விளங்கிக் கொள்ளமுடியும்.

# பகுதி - III

3.01 உடல் ஆரோக்கியம்

3.02 எப்பொழுதும் நோய்களால் பீடிக்கப்பட்டிருத்தல்

3.03 நோய் உண்டாகும் அவயவம்

3.04 நவக்கிரகங்களால் ஏற்படக் கூடிய நோய்கள்

3.05 கிரகங்கள் உடலுறுப்புகளில் ஏற்படுத்தும் நோய்கள்

3.06 நோய்களும் கிரகநிலைகளும் – I

3.07 கிரக பார்வையும் நோய்களும்

3.08 கிரகங்களால் பாதிக்கப்படும் தோஷங்கள்

3.09 நோய்களும் கிரக நிலைகளும் – II

3.10 குழந்தையின்மை – மலட்டுத்தன்மை

## 3.01 உடல் ஆரோக்கியம்

நவக்கிரகங்கள் ஒருவரின் ஜாதகத்தில் அமைந்துள்ள இடங்களையும் அவர்களின் வலிமையையும் பொறுத்து ஒருவரின் ஆரோக்கியம் பற்றி அறிந்து கொள்ள முடியும்.

**சில உதாரணங்கள் :**

1. இலக்கினத்துக்கு அதிபதி உச்சமாகி, நட்பு வீட்டில் இருத்தல் அல்லது சுபக்கிரகங்களுடன் இருத்தல் அல்லது சுபக்கிரகங்களின் பார்வையைப் பெற்றிருந்தாலும் உடல் ஆரோக்கியத் திற்குக் கேடில்லை.
2. எட்டாம் வீட்டுக்கு அதிபதி சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டாலும் ஆரோக்கியமாக இருப்பர்.
3. இலக்கினாதிபதி பலமடைந்திருப்பதுடன் இலக்கினம், 11, 12 இல் சுபக்கிரகங்கள் இருத்தல்.
4. இலக்கினாதிபதி சுபக்கிரகமாக இருப்பதுடன் 1, 2, 3 ஆம் இடங்களில் சுபக் கிரகங்கள் இருத்தல்.
5. இலக்கினத்தில் சுபக்கிரகமிருப்பின் ஆரோக்கியம் உண்டாம்.
6. இலக்கினத்தின் இருபுறமும் சுபக்கிரகங்களிருந்தாலும் ஆரோக்கியமுண்டாம்
7. 12 ஆம் வீட்டதிபதி பலமற்று 8 ஆம் வீட்டதிபதியுடன் சேர்ந்திருப்பதுடன் 10 ஆம் வீட்டதிபதி பலம் பெற்றுமிருந்தால் நோயின்றிய வாழ்க்கை

8. சந்திரன் சுபக்கிரகங்களுடன் கூடி 6 - 8 - 12 ஆம் இடங்களைத் தவிர்த்து வேறிடங்களி லிருந்து, இலக்கினாதிபதியும் சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டால் ஆரோக்கியமாம்.

## 3.02 எப்பொழுதும் நோய்களால் பீடிக்கப் பட்டிருத்தல்

சிலர் எப்பொழுதும் ஏதாவது நோயினால் பீடிக் கப்பட்டு வருந்துவர். அதற்கும் அவரது ஜாதக அமைப்பே காரணமாகும்.

**உதாரணங்கள்:**

1. இலக்கினாதிபதி இலக்கினத்தில் பலமின்றியும் 6 - 8 - 12 ஆம் அதிபதிகளுடனும் சேர்ந்திருப்பின் எப்பொழுதும் இளைத்த உடலுடனும் வியாதி யுடனும் இருப்பர்.

2. இலக்கினாதிபதி பலமற்று பாபக்கிரகங்களின் சம்பந்தம் பெற்று (அதாவது பாபக் கிரகங் களின் பார்வை, கூட்டு) கேந்திர, திரிகோணத் தில் இருந்தாலும் எப்பொழுதும் வியாதியாம்.

3. இலக்கினத்தில் புதன் அல்லது சந்திரன் இருந்து அதைப் பாபக் கிரகங்கள் பார்த்தல்.

4. 6 ஆம் இடத்தில் பாபக் கிரகமிருந்து, 6 ஆம் வீட்டதிபதி பாபக்கிரகத்தின் சேர்க்கையடைந்து செவ்வாய், ராகுவுடன் சேர்ந்துமிருந்தால் நிரந்தர நோயாளி.

## 3.03 நோய் உண்டாகும் அவயவம்

ஒருவரின் ஜாதகத்தில் 12 வீடுகளும் அவரின் உடல் அவயவங்களுடன் தொடர்புடையவையாக அமைந்துள்ளன. எனவே ஜாதகத்தில் எட்டாம் அதி பதி எங்குள்ளாரோ அந்த வீட்டுக்குரிய அவயவத் தைப்பற்றியதாக நோய்கள் உண்டாகும்.

| | வீடு | | அவயவம் |
|---|---|---|---|
| 1. | 1 ஆம் வீடு | - | தலை |
| 2. | 2 ஆம் வீடு | - | முகம், கண் |
| 3. | 3 ஆம் வீடு | - | கழுத்து, காது |
| 4. | 4 ஆம் வீடு | - | தோள், இருதயம் |
| 5. | 5 ஆம் வீடு | - | மார்பு, வயிறு |
| 6. | 6 ஆம் வீடு | - | சந்து, அடிவயிறு |
| 7. | 7 ஆம் வீடு | - | மர்மஸ்தானம் / பிறப்புறுப்புகள் |
| 8. | 8 ஆம் வீடு | - | ஆசனம் / மலவாசல் |
| 9. | 9 ஆம் வீடு | - | தொடை |
| 10. | 10 ஆம் வீடு | - | முழங்கால் |
| 11. | 11 ஆம் வீடு | - | கணைக்கால் |
| 12. | 12 ஆம் வீடு | - | பாதம் |

## 3.04 நவக்கிரகங்களால் ஏற்படக்கூடிய நோய்கள்

| | கிரகம் | நோய் |
|---|---|---|
| 1. | சூரியன் | வயிற்றுவலி, அரையாப்பு, சொறி, சிரங்கு, உஷ்ணசம்பந்தமான நோய்கள் |

2. சந்திரன் - அஜீரணம், வயிற்றோட்டம், சீத பேதி, இரத்தசம்பந்தமான நோய்கள்.

3. செவ்வாய் - வாந்தி, கிராணி, தலைவலி, மண்டையிடி

4. புதன் - கைகால் முடக்கம், வாத நோய், கழுத்துப்புண்.

5. வியாழன் - மர்மஸ்தானவியாதி, உதிரப் போக்கு

6. வெள்ளி - கட்டி, பிளவை, மூல நோய், பிறப்புறுப்பு நோய்கள், சூலை நோய், ஒரு கண்வலி.

7. சனி - வாத ரோகம், சூலைநோய், எலும்புருக்கி

8. இராகு/கேது - விஷம், மயக்கம்.

## 3.05 கிரகங்கள் உடலுறுப்புகளில் ஏற்படுத்தும் நோய்கள்

கிரகங்கள் உடலுறுப்புகள் சிலவற்றில் அதிக ஆதிக்கம் செலுத்துகின்றன. அதன் விளைவாக அவற்றில் நோய் ஏற்படவும் காரணமாயுள்ளன.

| | கிரகம் | உடலுறுப்பு / பகுதி | நோய் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | கண்<br>பித்தம் | கண்சம்பந்தமான நோய்கள். பித்த சம்பந்தமான நோய்கள். ஒற்றைத்தலை வலி. |

| | | | |
|---|---|---|---|
| 2. | சந்திரன் | மனம் கபம் | மனம் சம்பந்தமான நோய்கள். கபநோய்கள் |
| 3. | செவ்வாய் | இரத்தம் | இரத்தம் சம்பந்தமான நோய்கள் |
| 4. | புதன் | வாதம் | வாதநோய்கள் |
| 5. | வியாழன் | | கட்டி |
| 6. | வெள்ளி | கருப்பாசயம் | கருப்பாசய நோய்கள் பிறப்புறுப்புகள் சம் பந்தமான நோய்கள். பாலியல் நோய்கள். |
| 7. | சனி | சிறு நீரகம் | சீறுநீரக நோய்கள் |
| 8. | ராகு/கேது | பிறப்பு றுப்புகள் | பிறப்புறுப்புகள் சம்பந் தமான நோய்கள், மலட் டுத்தன்மை, புற்று நோய் |

செவ்வாய் இரத்தசம்பந்தமான நோய்களை ஏற்படுத்துகிறது. உதாரணமாக இரத்தப் புற்றுநோய், குருதி இழப்பு.

செவ்வாய் தோஷம் பற்றி ஜோதிட சாத்திரத்தில் முக்கியமாக திருமணத்தில் பேசப்படுகிறது. செவ் வாய்க் குற்றமுள்ள ஜாதகரின் குருதி வகுப்பில் $Rh^-$ (அதாவது Rh Negative) என்ற பிரிவு உள்ளதாக மருத்துவ சோதிடர்களிற் கணிசமானோர் கருதுகின் றனர். எனவே, இவர்களுக்கு பொருத்தமான செவ் வாய்க் குற்றமுள்ள ஜாதகரே வாழ்க்கைத் துணை

யாக தேர்ந்தெடுப்பது நல்லது. அல்லாவிடின் கருத் தரித்து குழந்தை பெறுவதில் (Rh incompatibility) சில சிக்கல்கள் ஏற்பட வாய்ப்புண்டு. இதுபற்றி விரி வான ஆய்வுகள் அவசியமாகும்

## 3.06 நோய்களும் கிரகநிலைகளும் – I

நமது உடலில் ஏற்படும் நோய்கள் ஒவ்வொன் றிற்கும் சிறப்பான காரணங்கள் உண்டு என வைத் திய நூல்கள் கூறுகின்றன. அதே போன்று குறித்த ஒரு நோய் ஏற்படுவதற்கு ஒருவரின் ஜாதகத்திலுள்ள கிரக அமைப்பு, கிரக சேர்க்கை, கிரக சஞ்சாரம் கிரகப் பார்வை முதலிய பல்வேறு காரணங்கள் உள்ளதாக சோதிடநூல்கள் கூறுகின்றன. ஒருவரின் ஜாதகப்படி நோயைக் கண்டறிவதற்கு 6-8-12 ஆம் இடங்களைக் கருத்தில் கொள்ளுதல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| 6 ஆம் வீடு | - | ரோக ஸ்தானம் |
| 8 ஆம் வீடு | - | ஆயுள் ஸ்தானம் |
| 12 ஆம் வீடு | - | விரயஸ்தானம் |

இவற்றில் முக்கியமாக

i. 6 ஆம் வீட்டில் உள்ள கிரகம் அல்லது கிரகங்கள்
ii. 6 ஆம் வீட்டைப் பார்க்கும் கிரகங்கள்
iii. 6 ஆம் வீட்டு அதிபதி ஜாதகத்தில் உள்ள இடம் என்பவற்றைக் கவனத்திற் கொண்டு ஒரு வருக்கு இன்ன நோய் ஏற்படலாம் என்று அறிந்து கொள்ளலாம்.

அத்துடன் பஞ்சாங்கத்தில் கிரகங்கள் மாறும் போது உள்ள நிலைகளையும் ஜனன ஜாதகத்துடன் ஒப்பிட்டு ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

குறிப்பு - இந்தப் பகுதியை விளங்கிக் கொள்வதற்கு பகுதி I பற்றி தெளிவாக விளங்கியிருத்தல் அவசியம்.

**சில உதாரணங்கள்.**

1. 6 ஆம் இடத்தில் பல கிரகங்களிருந்தால் புத்திர சோகம், விரல்களை இழக்க நேரிடும்.

2. 6 ஆம் வீட்டில் சூரியன் இருந்தால் காசம், பித்தம், கபம், காய்ச்சல், தோல் வியாதிகள், கண் நோய்கள், காக்கை வலிப்பு என்பன ஏற்படலாம்.

3. 6 ஆம் வீட்டில் சந்திரன் இருந்தால் கண் சம்பந்தப்பட்ட நோய்கள், வயிற்றோட்டம் (அதிசாரம்), காசம் (சுவாச நோய்), சயரோகம், விக்கல், காக்கைவலிப்பு, பெருவயிறு (ஜலோதரம்) போன்ற நோய்கள் ஏற்படும்.

4. 6 ஆம் வீட்டில் செவ்வாய் இருந்தால் புண், காய்ச்சல், குஷ்டம், இரத்தப்போக்கு, மூலநோய், தவளைச்சொறி, நெருப்புச்சுட்டபுண் முதலிய நோய்கள் ஏற்படும்.

5. 6 ஆம் வீட்டில் புதன் இருந்தால் வாதபித்த சுரம், குருதிச் சோகை, பெருவயிறு கழுத்து, மூக்கு நோய்கள் ஏற்படலாம்.

6. 6 ஆம் வீட்டில் வியாழன் இருந்தால் பிரமேகம், நாக்கில் நோய், பல்வலி, குன்மம் (இரைப்பை - குடற்புண்), காது நோய் என்பன ஏற்படலாம்.

7. 6 ஆம் வீட்டில் வெள்ளி இருந்தால் என்புருக்கி, கண் சம்பந்தமான நோய்கள், மூல நோய், மூத்திரம் போவதில் பிரச்சினைகள், குருதிச் சோகை, நீரிழிவு, பிறப்புறுப்புகள் சம்பந்தமான நோய்கள் ஏற்படலாம்.

8. 6 ஆம் வீட்டில் சனி இருந்தால் வாத நோய்கள், நரம்பு சம்பந்தமான நோய்கள், பாரிசவாதம், குஷ்டம், விஷநோய்கள் ஏற்படலாம்.

9 6 ஆம் வீட்டில் ராகு இருந்தால் தலை பெரிதாக இருக்கும். காலில் பீடை, குஷ்டம், இருதய நோய், விஷம் என்பவற்றால் பாதிப்பு ஏற்படலாம் சிலர் 6 இல் ராகு இருந்தால் விஷந்தீண்டினாலும் பயமில்லை என்றுங் கூறுவர்.

10. 6 ஆம் வீட்டில் கேது இருந்தால் புத்திக்குறைவு, விஷம், காக்கைவலிப்பு முதலியன ஏற்படக் கூடும். கண்ணில் கரு நிற மச்சம் காணப்படும்.

11. சனி 4 ஆம் வீட்டில் இருந்தால் இருதயவலி, ஏற்படும். இளவயதில் நோய்கள் ஏற்படும்.

## 3.07 கிரகபார்வையும் நோய்களும்

1. சூரியன் 6 ஆம் வீட்டைப் பார்த்தால் வலது கண்ணில் நோய்.
2. சந்திரன் 6 ஆம் வீட்டைப் பார்த்தால் சயரோகம், கப சம்பந்தமான நோய்கள்.
3. செவ்வாய் 6 ஆம் வீட்டைப் பார்த்தால் ஆயுதங்களால் காயப்படுதல், நெருப்பு சம்பந்தத்தால் ஏற்படும் விரணங்கள்.
4. சனி 6 ஆம் வீட்டைப் பார்த்தால் கால், கண், முகம் முதலிய உறுப்புகளில் விரணங்கள் ஏற்படும்.
5. கடகராசியில் சந்திரன் இருந்து செவ்வாயினால் பார்க்கப்பட்டால் சூலை அல்லது கடும் வயிற்று வலி நோய் ஏற்படும்.

## 3.08 கிரகங்களால் பாதிக்கப்படும் தோஷங்கள்

| | கிரகம் | | தோஷம் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | வாயுவுடன் கலந்த பித்தம் |
| 2. | சந்திரன் | - | வாதம், கபம் |
| 3. | செவ்வாய் | - | பித்தம் |
| 4. | புதன் | - | வாதம், பித்தம், கபம் |
| 5. | வியாழன் | - | வாதம், கபம் |
| 6. | வெள்ளி | - | வாதம், கபம் |
| 7. | சனி | - | வாதம், பித்தம் |

*மேலும் இக்கிரகங்கள் ஜலராசி (சாராசி) ஸ்திர ராசி, உபயராசி என்பவற்றில் எதில் அமைந்துள்ளன என்பதையும் கருத்தில் கொண்டு நோயின் தன்மையை கண்டு கொள்ளலாம்.*

## 3.09 நோய்களும் கிரக நிலைகளும் – II

### குடலேற்றம் / குடலிறக்கம்

1. *இலக்கினத்தில் அல்லது லக்கின அம்சத்தில் செவ்வாய் இருத்தல்.*
2. *தேய்பிறைச் சந்திரன் சூரியனுடன் கூடி இருத்தல்.*
3. *நீசக் கிரகத்துடன் புதன் சேர்ந்திருத்தல்*

### பித்தரோகம்

1. *இலக்கினாதிபதி சூரியனுடன் கூடியிருத்தல்.*
2. *8 ஆம் இடத்தில் சூரியன் இருக்க, இலக்கினத்துக்குச் சுபக்கிரகத்தின் பார்வை இல்லாதிருத்தல்.*

*விளக்கம்: இலக்கினம் அதாவது ஜீவஸ்தானத்தின் அதிபதி பித்தக்கிரகமாகிய சூரியனுடன் சேர்ந்திருந்தாலும் அல்லது ஆயுள் ஸ்தானமாகிய அட்டம ஸ்தானத்தில் சூரியன் இருந்து ஜீவஸ்தானத்துக்கு அதாவது இலக்கினத்துக்கு சுபக்கிரக பார்வை இல்லாதிருந்தாலும் பித்த சம்பந்தமான நோய்கள் ஏற்படும்.*

3. சூரியன் 6 ஆம் வீட்டில் பாபிகளுடன் கூடியிருப்பது அல்லது பாபக்கிரகங்களின் பார்வையைப் பெறுவதாலும் ஏற்படும்.

**வாத ரோகம்**

1. சனி இலக்கினத்திலும் சந்திரன் 6 அல்லது 7 ஆம் இடத்திலிருக்கும் போது, செவ்வாய் இலக்கினத்தைப் பார்த்தால் வாத நோய் ஏற்படும்.

2. சனி இலக்கினத்துக்கு அதிபதியாகி, அந்த இலக்கினத்தில் அல்லது 5 ஆம் இடத்தில் சனி இருக்க, லக்கினத்தைச் சுபக்கிரகங்கள் பார்க்காவிடின் அல்லது பாபக்கிரகங்கள் பார்ப்பின் வாதநோய்கள் ஏற்படும்.

3. இராகு இலக்கினத்திலிருக்க அதைப்பாபக்கிரகங்கள் பார்க்க, 6 - 8 ஆம் இடத்தில் சனியிருந்தால் மாறாத வாத நோய்கள் ஏற்படும்.

4. வியாழன் இலக்கினத்திலும் சனி 7 இலும் இருந்தால் அல்லது சனி இலக்கினத்திலும் வியாழன் 7 இலும் இருந்தாலும் ஏற்படும்.

**சய ரோகம்**

1. சலராசி உதயலக்கினமாகி, அதில் தேய்பிறைச் சந்திரன் பாபக்கிரகங்களுடன் கூடியிருக்க, 6 ஆம் இடத்தில் பாபக்கிரகங்களிருந்தால் சய ரோகம் ஏற்படும்.

**விளக்கம்:** *வாத - பித்த - கபங்கள் முறையே வாயு - தேயு - அப்பு பூதங்களை ஆதாரமாகக் கொண்டவை. எனவே சலராசி இலக்கினமாகி, சலக்கிரகமும் தேக காரகனுமாகிய சந்திரன் பலவீனமாய் (தேய்பிறை) பாபக்கிரகங்களுடன் இருப்பதாலும், ரோகஸ்தானத் தில் பாபக்கிரகம் இருப்பதாலும் சிலேஷ்மரோகமான சயரோகம் ஏற்படும் என்பதாம்.*

**நெருப்புக்காய்சல்**

1. *செவ்வாய் இலக்கினத்தைப் பார்க்க ( அதாவது ரோகஸ்தானமாகிய 6 ஆம் வீட்டிலிருந்து 8 ஆம் பார்வை), பாபக் கிரகங்கள் புதனுடன் கூடி 2 - 8 ஆம் இடங்களிலிருக்க நெருப்புக்காய்ச்சல் ஏற்படும். (செவ்வாய் - நெருப்பு - அனற் கிரகம்)*

**பிரமேக ரோகம்**

1. *இலக்கினம் பாபக்கிரக வீடாகி, பாபக்கிரக பார்வை பெற, சுக்கிரன் 2-8 ஆம் வீட்டிலிருக்க, இலக்கினாதிபதி பகை, நீச இராசியில் இருப்பின் பிரமேகம் ஏற்படும்.*

2. *10 ஆம் இடத்தில் செவ்வாய் இருந்து சனியும் அதனுடன் இருந்தால் அல்லது சனியால் பார்க் கப்பட்டாலும் ஏற்படும்.*

**விரண ரோகம்**

1. *செவ்வாய் 8 ஆம் வீட்டில் பலம் பெற்றிருக்க, இலக்கினத்தை பாபக்கிரகங்கள் பார்க்க 2 - 8 ஆம் இடங்களில் கேது இருக்க விரண ரோகங்கள் ஏற்படும்.*

2. *பாபருடன் கூடிய சந்திரன் 9 ஆம் இடத்தில் இருந்தால் சொறி, சிரங்கு ஏற்படும்.*

**மூலநோய்**

*இலக்கினத்தில் சனியும் 7 ஆம் இடத்தில் செவ்வாயும் இருந்தால் ஏற்படும்.*

**சலரோகம்**

1. *4 ஆம் வீட்டில் சனியும் 6 ஆம் வீட்டில் பாபக் கிரகங்களும் இருக்க, செவ்வாய் இலக்கினத்தைப் பார்க்க சலரோகம் அல்லது வாதரோகம் ஏற்படும்.*

2. *சந்திரன் இராகுவுடன் சேர்ந்து சுபக் கிரகப் பார்வை பெறாதிருப்பினும் ஏற்படும்.*

**குன்ம ரோகம்**

1. *இலக்கினத்தில் சனியிருந்து, தேய்பிறைச் சந்திரன் பாபக்கிரகங்களுடனிருக்க, 6 - 8 இல் பாபக் கிரகங்களிருந்தாலும் குன்ம நோய் ஏற்படும்.*

2. வியாழனும், சந்திரனும் 6 ஆம் இடத்தில் இருந் தால் 19 அல்லது 22 வயதில் குன்ம நோய் ஏற்படும்.

3. இலக்கினத்தில் சூரியனிருந்து செவ்வாயினால் பார்க்கப்பட்டால் குன்மம், சயம், முதலிய நோய் கள் ஏற்படும்.

**இருதய நோய்கள்**

1. 4 ஆம் வீட்டில் வியாழன், செவ்வாய், சனி இருந்தால் ஏற்படும்.

2. ஐந்தாம் வீட்டில் பாபக்கிரகங்களிருக்க, இருதய ஸ்தானாதிபதி (5 ஆம் வீட்டதிபதி) பாபக்கிரகங் களுடன் கூடியிருக்க அல்லது பாபக்கிரகங் களால் பார்க்கப்பட அல்லது பாபக்கிரகங்களு க்கு மத்தியிலிருக்க இருதய நோய் உண்டாகும்.

**கண்ணோய்கள்**

1. இரண்டாம் வீட்டதிபதியும் சனியும், செவ்வாயும் சேர்ந்திருந்தாலும் கண் சம்பந்தமான நோய் களுண்டாம்.

2. இரண்டாம் வீட்டின் அதிபதி பாபராகி 6 - 8 - 12 இல் இருந்தாலும் கண்வியாதிகளுண்டாம்.

3. 12 ஆம் வீட்டில் சூரியனும் சந்திரனும் சேர்ந் திருந்தால் கண்பார்வை கெடும்.

**தொய்வு**

1. சூரியன் மகரத்திலும், சந்திரன் சனிக்கும் செவ்வாய்க்கும் இடையிலும் நின்றால் தொய்வு நோய் உண்டாகும்.

2. இராகு 6 இலும், மாந்தி கேந்திரத்திலும், இலக்கினாதிபதி 8 இலும் இருந்தாலும் தொய்வு ஏற்படும். (மாந்தி அல்லது குளிகன் என்பது ராகு, கேது போல் ஒரு சாயாக்கிரகமாகும்)

**பைத்தியம், புத்திக்குறைவு**

1. இலக்கினத்தில் குருவும் 7 ஆம் வீட்டில் செவ்வாயும் இருத்தல்.

2. இலக்கினத்தில் சனியும் 5 அல்லது 7 இல் செவ்வாய் இருத்தல்.

3. சந்திரன் அல்லது செவ்வாய் 5 ஆம் வீட்டிலும் சூரியன் 3 - 6 - 12 இலும் இருத்தல்.

4. சந்திரனும், புதனும் கேந்திர ஸ்தானங்களில் இருத்தல்.

5. இலக்கினத்தில் சனியும் 7 இல் வெள்ளியும் விருச்சிகத்தில் சந்திரனும் (நீச சந்திரன்) இருத்தல்.

**பைத்தியம் (உன்மாத ரோகம்)**

1. லக்கினத்தில் சூரியனும் 7 இல் செவ்வாயும் இருந்தால் ஏற்படும்.

2. இலக்கினத்தில் வியாழனும் சூரியனும் இருந்தாலும் ஏற்படும்.

3. செவ்வாய் 7 இல் இருந்தாலும் ஏற்படும்.

4. சனி இலக்கினத்தில் இருந்தாலும் ஏற்படும்

5. வளர்பிறைச் சந்திரன் சனியுடன் கூடி 12 இல் இருந்தாலும் ஏற்படும்.

**அங்கஹீனம்**

சந்திரன் 10 ஆம் வீட்டிலும், செவ்வாய் 7 ஆம் வீட்டிலும், சூரியனுக்கு 2 இல் சனியும் இருந்தால் உடலில் ஏதேனும் குறைபாடு ஏற்படும்.

**மூத்திர ரோகங்கள்**

1. 7 ஆம் இடம் ஜலராசியாகி அதில் சனி, செவ்வாய், சூரியன், ராகு இருந்தால் மூத்திரம் அதிகம் போகும்.

2. 7 ஆம் இடம் ஜலராசியாகிய இலக்கினத்தில் ஜலக்கிரகமிருந்து (சந்திரன்), அல்லது பார்க்கப்பட்டால் மூத்திர கிருச்சிரம் ஏற்படும்.

3. சந்திரன் ஜலராசியில் இருந்து சந்திரன் உள்ள வீட்டுக்குடையவன் 6 ஆம் இடத்திலிருந்து ஜலராசியில் இருக்கின்ற புதனால் பார்க்கப்பட்டாலும் மூத்திர கிருச்சிரம் ஏற்படும்.

**வயிற்று நோய்கள் (உதர ரோகம்)**

1. 4 இல் இராகு அல்லது கேது இருத்தல்
2. 8 இல் சனியும் இலக்கினத்தில் சந்திரனும் இருத்தல்

**காக்கைவலிப்பு**

1. சந்திரன் சனியுடன் கூடி செவ்வாயினால் பார்க் கப்பட்டால் ஏற்படும்.
2. 8 இல் சந்திரனும் ராகுவும் இருந்தாலும் ஏற்படும்

**வெண்குஷ்டம்**

1. சந்திரனும் வெள்ளியும் பாபருடன் கூடி ஜலராசி யில் இருந்தால் ஏற்படும்.
2. இலக்கினாம்சத்துக்கு 4 இல் சந்திரனிருந்து வெள்ளியினால் பார்க்கப்பட்டாலும் ஏற்படும்
3. செவ்வாய் 2 இலும் சனி 12 இலும் சந்திரன் இலக்கினத்திலும் சூரியன் 7 இலும் இருந்தாலும் ஏற்படும்.

**பல்நோய்**

இலக்கினத்தில் வியாழனும், இராகுவும் இருந் தால் ஏற்படும்.

### பீனிசம். மூக்கடைப்புநோய்

1) 6 இல் சந்திரன், 8 இல் சனி, 12 இல் பாபக்கிரகம் இருந்து இலக்கினாதிபதி பாபம்சத்தில் இருந்தால் ஏற்படும்.

2) மேடம் அல்லது இடபத்தில் சனி இருப்பதுடன் ஜலராசிகளில் அதிக கிரகங்களிருந்தாலும் ஏற்படும்.

### நாட்பட்ட வயிற்றோட்டம் (கிரகணி)

9 இல் சனி அல்லது இராகு இருந்தால் ஏற்படும்

### வயிற்றோட்டம் (அதிசாரம்)

1. சந்திரனும் வெள்ளியும் 8 ஆம் இடத்தில் இருந்தால் ஏற்படும் (சந்திரன் - ஜலக்கிரகம்)

2. இலக்கினத்தில் இராகுவும் புதனும் இருந்து 7 இல் செவ்வாயும் சனியும் இருந்தாலும் ஏற்படும்.

### புற்று நோய்

1. இலக்கினாதிபதி சனி அல்லது இராகுவினால் பார்க்கப்பட்டு 6-8-12 இல் இருந்தால் ஏற்படும்.

2. கால சர்ப்ப தோஷம் அதாவது ஜாதகத்தில் கிரகங்கள் யாவும் ராகுவுக்கும் கேதுவுக்கும் இடையில் அடங்கியிருந்தாலும் ஏற்படலாம்.

3. சூரியன், புதன், சுக்கிரன், சந்திரன் ஆகியன இராகு அல்லது கேதுவினால் அல்லது செவ் வாய் அல்லது சனியினால் பார்க்கப்பட்டாலும் ஏற்படலாம்.

4. சூரியன் சிங்கராசியிலிருந்து 6-8-12 ஆம் அதிபதி களில் ஒருவரால் பார்க்கப்படினும் ஏற்படலாம்.

### எயிட்ஸ் (AIDS)

வெள்ளியும் செவ்வாயும் பாபக்கிரகங்களுடன் சம்பந்தப்பட்டு, 7 ஆம் பாவத்திலிருந்தால் ஏற்படும்.

### பெண் பிறப்புறுப்பு நோய்கள்

சந்திரன் நவாம்சத்தில் கடகம், விருச்சிகத்தில் பாபக்கிரகங்களுடன் சேர்ந்திருந்தால் பெண்களின் பிறப்புறுப்புகளில் வியாதி ஏற்படும்.

### பாம்புக்கடி

1) 1. பரணி
   2. கார்த்திகை
   3. ஆயிலியம்
   4. விசாகம்
   5. பூரம்
   6. பூரட்டாதி
   7. பூராடம்
   8. சதயம்

ஆகிய நட்சத்திரங்களுடன் கூடிய பௌர்ணமி யிலும், நிருதி மூலையிலும்,அசுர முகூர்த்தத்திலும் பாம்பு தீண்டினால் அது அசாத்தியம்.

2) 1. மகம்
2. திருவோணம்
3. மூலம்
4. சித்திரை
5. சுவாதி

ஆகிய நட்சத்திரத்திரங்களிலும், பிறந்தநாள், அநுசனம், திரிசனம் நாள் இவை சேர்ந்த அவிட்ட நட்சத்திரத்திலும் நவமியிலும் வீட்டிறப்புகளிலிருந்து பாம்பு தீண்டினால் தீராது.

3) பௌர்ணமி
அமாவாசை
பிரதமை
பஞ்சமி
அட்டமி
நவமி

இத்திதிகளில் தீண்டினாலும் தீராது.

## 3.10 குழந்தையின்மை – மலட்டுத்தன்மை

குழந்தைப் பேறின்மை - அல்லது மலட்டுத்தன் மைக்கு பல்வேறு காரணங்களை மருத்துவ நூல்கள் கூறியுள்ளன. பரராசசேகரம் போன்ற வைத்திய நூல் களில் கிரகநிலையும் அதற்கு ஒரு காரணம் என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

மலட்டுத்தன்மையைப் பற்றி ஜாதகத்தில் ஆராயும் போது **இலக்கினம், ஐந்தாம் வீடு, ஏழாம்வீடு** அவற்றின் அதிபதிகளைப் பற்றி ஆராயவேண்டும். ஏனெனில், இலக்கினம் அல்லது இலக்கினாதிபதி பலமிழந்து காணப்படின் ஜாதகரின் தேகவலிமை பாதிக்கப்பட்டிருக்கும். (இலக்கினம் - ஜீவஸ்தானம்) அதனால் புத்திரப்பேறும் பாதிக்கப்படும். ஐந்தாம்வீடு புத்திர ஸ்தானமாகும். எனவே இவ்வீடும் அதன் அதிபதியும் வலிமையற்றிருந்தாலும் புத்திரபாக்கியம் கிடைக்காது. மேலும் ஏழாம் வீடு களத்திர ஸ்தான மாகும். தாம்பத்திய உறவு நல்ல நிலையில் அமை வதற்கு இந்த ஸ்தானமும் அதிபதியும் வலிமை பெற்றிருத்தல் அவசியமாகும். அவ்விதம் இல்லா விடின் மலட்டுத்தன்மை ஏற்படும். இவற்றோடு ஜாத கத்தில் வியாழனும் வலிமை பெற்றிருத்தல் வேண் டும். ஏனெனில் பூர்வபுண்ணிய பலனைத் தெரிவிக் கின்ற வியாழன் புத்திரகாரகன் ஆக இருப்பதினால் என்க.

எனவே இலக்கினம் - ஐந்தாம் இடம் - ஏழாம் இடம் என்பவற்றுக்கு அதிபதிகள் பலமிழந்து காணப் படின் மலட்டுத்தன்மை ஏற்படும்.

**சில உதாரணங்கள்**

1. 5ஆம் இடத்தில் பாபக்கிரகமிருக்க, 5 ஆம் இடத்ததிபதி நீசமடைந்தும் சுபக்கிரக பார்வை இவர்களுக்கு இல்லாதிருப்பினும் மலட்டுத் தன்மை ஏற்படும்.

2. சந்திரன் தனு அல்லது மீனத்திலும், பாபக்கிர கங்கள் 5 ஆம் இடத்திலும் இருக்க இவர்களைச் சுபக்கிரகங்கள் பார்க்காவிடின் மலட்டுத் தன்மையாம்.

3. கிரகங்கள் யாவும் இராகு கேதுவினுள் அடங்கி நாகதோஷம் அல்லது கால சர்ப்பதோஷத்தி னால் பீடிக்கப்பட்டிருப்பினும் மலட்டுத்தன்மை ஏற்படும் அல்லது அற்ப புத்திரிகள் கிடைப்பர்.

4. 5 ஆம் இடத்தில் பாபக்கிரகங்களிருக்க, புத்திர ஸ்தானாதிபதி 6-8-12 இல் ஒன்றில் பலங்குன்றி யிருக்க, இவற்றை சுபக்கிரகங்கள் சேராதும், பார்க்காதும் இருந்தால் மலட்டுத் தன்மை ஏற்படும்.

5. புத்திர ஸ்தானத்தில் பாபக்கிரகங்களிருக்க, புத்திர ஸ்தானதிபதியையும் புத்திர ஸ்தானத்தை யும் பாபக்கிரகங்கள் பார்க்கினும் மலட்டுத் தன்மை யாம்.

6. 7 ஆம் அதிபதி நீசமடைந்திருந்தாலும் மலட்டுத் தன்மை எற்படும்.

7. 7, 8 இல் சனி, செவ்வாய் இருக்க அவற்றிற்கு 7,5 இல் இராகு நிற்பினும் பிள்ளைகள் இல்லையாம்.

8. 9இல் சூரியனும் செவ்வாயும் நின்றாலும் மலடு. அல்லது 9 இல் செவ்வாய் நிற்க அதைச் சூரியன் பார்த்தாலும் மலடு.

9. இலக்கினாதிபதி சனியுடன் கூடி 11ஆம் வீட்டிலிருப்பினும் மலடு.

10. 5ஆம் அதிபதி நீசம் பெற்றிருந்தாலும் வியாழன் பலமிழந்து காணப்பட்டாலும் மலட்டுத்தன்மை ஏற்படும்.

11. புதன் 5 இலும், இலக்கினம் அல்லது 4 - 5-9 இல் பாபக்கிரகங்களிருப்பினும் பிள்ளை களில்லையாம்.

12. 5இல் இராகு, கேதுக்களிருப்பின் பிள்ளைகள் இல்லை என்பது பொதுக்கொள்கை.

13. 5 ஆம் வீட்டுக்குடையவன் 7இல் இருந்தாலும் புத்திரதோஷம்.

14. 5 ஆம் வீட்டுக்கதிபதி 12 ஆம் வீட்டில் இருந்தால் அடிக்கடி கருச்சிதைவும், புத்திரதோஷமும் ஏற்படும்.

**குறிப்பு:** பெண் ஜாதகத்தில் கணவனைப் பற்றி அறிவதற்கு 9 ஆம் வீட்டையும் பிள்ளைகளைப் பற்றி அறிவதற்கு 7 ஆம் வீட்டையும் பார்ப்பர்.

**காலற்றன உடலற்ன தலையற்றன நாளில்**
**கோலக்குய மடவார்தமைக் கூடின் மலடாவர்'**

**- சோதிட கிரக சிந்தாமணி**

அதாவது காலற்ற, உடலற்ற, தலையற்ற நட்சத்திரங்கள் வரும் நாட்களில் தாம்பத்திய உறவு

கொள்வதால் மலட்டுத்தன்மை ஏற்படும். அவ்வித மின்றி அத்தினத்தில் கருத்தரித்தால் பிறக்குங் குழந்தை அங்கவீனமுற்றதாகவோ அன்றி ஆணும் பெண்ணுமற்ற அலியாகவோ இருக்கும் என்பதாம்.

| **காலற்ற நாள்** | **உடலற்ற நாள்** | **தலையற்றநாள்** |
| --- | --- | --- |
| கார்த்திகை | மிருகசீரிடம் | புனர்பூசம் |
| உத்தரம் | சித்திரை | விசாகம் |
| உத்தராடம் | அவிட்டம் | பூரட்டாதி |

மேலும் பிள்ளை பிறக்கும் போது சிரசு உதய மாகப் பிறத்தல், பிருஷ்டம் உதயமாகப் பிறத்தல், காலுதயமாகப் பிறத்தல், கொடி சுற்றிப் பிறத்தல் போன்ற பல விடயங்களை நாம் மருத்துவ ஜோதிடம் மூலம் அறிந்து கொள்ளமுடியும். அவை பற்றி இங்கு எடுத்துக்கூறப்படவில்லை.

**ரோகஸ்தானம்**

**சரராசியாக இருந்தால் - வியாதிகள் விரைவில் குணமாகும்.**

**ஸ்திரராசியாக இருந்தால் - வியாதிகள் இறுதிக்காலம் வரை நீடித்து இருக்கும்.**

**உபயராசியாக இருந்தால் - விட்டுவரும் ஆனால் கடுமைப்படுத்தாது.**

# பகுதி - IV

## 4.01 நோயும் நட்சத்திரமும்

*நோய் எந்த நட்சத்திரத்தில் அதன் எத்தனை யாவது பாதத்திலுண்டாகின்றது என்பதைப் பொறுத்து அது எத்தனை நாளில் தீரும் அல்லது தீராது என்பது பற்றியும், மரணமுண்டாதல் பற்றியும் புலிப்பாணி வைத்தியம் - 500 என்ற நூலில் பின்வருமாறு கூறப் பட்டுள்ளது.*

*01. அசுவினி நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோயுண்டானால் 9 நாட்களில் தீரும். இரண் டாம் பாதத்தில் நோயுண்டானால் மரணம் ஏற் படும். மூன்றாம் பாதத்தில் நோயுண்டானால் 15 நாட்களில் தீரும். நான்காம் பாதத்தில் நோயுண்டானாலும் மரணம் ஏற்படும்.*

*02. பரணி நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோயுண்டானால் 3 நாட்களில் மாறும். இரண் டாம் பாதத்தில் நோயுண்டானால் 7 நாட்களில் மாறும். மூன்றாம், நான்காம் பாதங்களில் நோயுண்டானால் 15 நாட்களில் மாறும்.*

*03. கார்த்திகை நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோயுண்டானால் 9 நாட்களிலும், இரண்டாம் பாதத்தில் நோயுண்டானால் 10 நாட்களிலும், மூன்றாம் பாதத்தில் நோயுண்டானால் 15 நாட் களிலும், நான்காம் பாதத்தில் நோயுண்டானால் 48 நாட்களிலும் மாறும்.*

04. ரோகிணி நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோயுண்டானால் 10 நாட்களிலும், இரண்டாம் பாதத்திலுண்டானால் 18 நாட்களிலும், மூன்றாம் பாதத்திலுண்டானால் 32 நாட்களிலும், நான் காம் பாதத்திலுண்டானால் 82 நாட்களிலும் மாறும்.

05. மிருகசீரிட நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோயுண்டானால் 30 நாட்களிலும், இரண்டாம் பாதத்திலுண்டானால் 28 நாட்களிலும், மூன்றாம் பாதத்திலுண்டானால் 15 நாட்களிலும், நான் காம் பாதத்திலுண்டானால் 35 நாட்களிலும் மாறும்.

06. திருவாதிரை நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோயுண்டானால் 9 நாட்களில் மாறும். இரண் டாம் பாதத்திலுண்டானால் மாறாது, மரணம் ஏற்படும். மூன்றாம் பாதத்திலுண்டானால் 10 நாட்களிலும், நான்காம் பாதத்திலுண்டானால் 25 நாட்களிலும் மாறும்.

07. புனர்பூச நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோயுண்டானால் 7 நாட்களிலும், இரண்டாம் பாதத்திலுண்டானால் 10 நாட்களிலும், மூன்றாம் பாதத்திலுண்டானால் 18 நாட்களிலும் மாறும். நான்காம் பாதத்திலுண்டானால் மரணம் ஏற்படும்.

08. பூச நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோய் ஏற்பட்டால் 7 நாட்களிலும், இரண்டாம் பாதத் தில் ஏற்பட்டால் 12 நாட்களிலும், மூன்றாம் பாதத்தில் எற்பட்டால் 9 நாட்களிலும், நான் காம் பாதத்தில் ஏற்பட்டால் 27 நாட்களிலும் மாறும்.

09. ஆயிலிய நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோய்ப்பட்டால் 9 நாட்களிலும், இரண்டாம் பாதத்தில் நோய்ப்பட்டால் 20 நாட்களிலும், மூன்றாம் பாதத்தில் நோய்ப்பட்டால் 90 நாட் களிலும், நான்காம் பாதத்தில் நோய்ப்பட்டால் 39 நாட்களிலும் மாறும்.

10. மக நட்சத்திரம் முதலாம் பாதத்தில் நோய்ப் பட்டால் மரணம் எற்படும். இரண்டாம் பாதத் தில் நோய்வாய்ப்பட்டால் 30 நாட்களிலும், மூன் றாம் பாதத்தில் நோய்வாய்ப்பட்டால் 85 நாட் களிலும், நான்காம் பாதத்தில் நோய் ஏற்பட் டால் 5 நாட்களிலும் மாறும்.

11. பூர நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற் படின் மரணம் ஏற்படும். இரண்டாங்காலில் நோய் ஏற்படின் 25 நாட்களிலும், மூன்றாங் காலில் ஏற்படின் 26 நாட்களிலும், நாலாங் காலில் ஏற்படின் 81 நாட்களிலும் மாறும்.

12. உத்தர நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 08 நாட்களிலும், இரண்டாங்காலில் ஏற்படின் 30 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 52 நாட்களிலும் நோய் மாறும். நாலாங்காலில் ஏற்படின் மரணமுண்டாம்.

13. அத்த நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 08 நாட்களிலும், இரண்டாங்காலில் ஏற்படின் 15 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 28 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 82 நாட்களிலும் மாறும்.

14. சித்திரை நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 09 நாட்களிலும், இரண்டாங்காலில் ஏற்படின் 15 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 12 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 41 நாட்களிலும் மாறும்.

15. சுவாதி நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 12 நாட்களிலும் மாறும். இரண்டாங்காலில் நோய் ஏற்படின் மாறாது ; மரணம். மூன்றாங்காலில் ஏற்படின் 88 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 12 நாட்களிலும் மாறும்.

16. விசாக நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 09 நாட்களிலும், இரண்டாங்காலில் ஏற்படின் 03 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 40 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 81 நாட்களிலும் மாறும்.

17. அனுஷ நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் மாறாது. மரணமுண்டாகும். இரண்டாங்காலில் ஏற்படின் 20 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 90 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 40 நாட்களிலும் மாறும்.

18. கேட்டை நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் மரணம். இரண்டாங்காலில் ஏற்படின் 20 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 31 நாட்களிலும் நாலாங்காலில் ஏற்படின் நாட்களிலும் மாறும்.

19. மூல நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் மரணம். இரண்டாங்காலில் ஏற்படின் 09 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 10 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 18 நாட்களிலும் மாறும்.

20. பூராடநட்சத்திரம் முதலாங்காலில் நோய் எற் படின் 9 நாட்களில் மாறும். இரண்டாங்காலில் ஏற்படின் மரணம். மூன்றாங்காலில் ஏற்படின் 10 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 54 நாட்களிலும் மாறும்.

21. உத்தராட நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 7 நாட்களிலும், இரண்டாங் காலில் ஏற்படின் 20 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 50 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 40 நாட்களிலும் மாறும்.

22. திருவோண நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 11 நாட்களிலும், இரண்டாங்காலில் நோய் ஏற்படின் 10 நாட்களிலும், மூன்றாங் காலில் நோய் ஏற்படின் 8 நாட்களிலும் மாறும். நாலாங்காலில் நோய் ஏற்படின் மாறாது; மரணமுண்டாகும்.

23. அவிட்ட நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 9 நாட்களிலும், இரண்டாங்காலில் நோய் ஏற்படின் 15 நாட்களிலும், மூன்றாங் காலில் நோய் ஏற்படின் 32 நாட்களிலும் நாலாங்காலில் ஏற்படின் 39 நாட்களிலும் மாறும்.

24. சதய நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 7 நாட்களிலும், இரண்டாங்காலில் ஏற்படின் 10 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 4 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 5 நாட்களிலும் மாறும்.

25. பூரட்டாதி நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் மரணம்; இரண்டாங்காலில் ஏற்படின் 16 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 71 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 41 நாட்களிலும் மாறும்.

26. உத்தரட்டாதி நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் 7 நாட்களிலும், இரண்டாங் காலில் நோய் ஏற்படின் 18 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 7 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 28 நாட்களிலும் மாறும்.

27. ரேவதி நட்சத்திரம் முதலாங்காலில் நோய் ஏற்படின் மரணம். இரண்டாங்காலில் ஏற்படின் 11 நாட்களிலும், மூன்றாங்காலில் ஏற்படின் 18 நாட்களிலும், நாலாங்காலில் ஏற்படின் 26 நாட்களிலும் மாறும்.

## 4.02 நோய்க்கு ஆகாத நாளும் நட்சத்திரமும்

*சில நாட்களில் சில நட்சத்திரங்கள் வரும் போது ஒருவர் நோய்வாய்ப்பட நேர்ந்தால் அந்நோய் தீராது, மரணம் ஏற்படும்.*

**உதாரணம்:**

| | | | |
|---|---|---|---|
| *1.* | *ஞாயிறு* | - | *பரணி* |
| *2.* | *திங்கள்* | - | *சித்திரை* |
| *3.* | *செவ்வாய்* | - | *உத்தராடம்* |
| *4.* | *புதன்* | - | *அத்தம்* |
| *5.* | *வியாழன்* | - | *கேட்டை* |
| *6.* | *வெள்ளி* | - | *பூராடம்* |
| *7.* | *சனி* | - | *ரேவதி* |

*மேற்படி கிழமைகளில் மேற்படி நட்சத்திரம் கூடிவரும் போது நோய் ஏற்பட்டால் மரணம் ஏற்படும் என்பதாம்.*

## 4.03 நோய் நட்சத்திரமும் தீரும் கால அளவும் - I

*நோய் தொடங்கும் நட்சத்திரத்தைப் பொறுத்து அது தீரும் கால அளவு பற்றியும் அவ்விதம் குறித்த நாளில் தீராவிடின் செய்யவேண்டிய பிராயச்சித்தம் (பலி) பற்றியும் பிராயச்சித்தம் செய்யும் இடம் பற்றியும் செகராசசேகர மாலை என்னும் நூலில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.*

| நோய் தொடங்கும் நட்சத்திரம் | நோய் தீரும் நாள் | தீராவிடின் இடும்பலி | பலிஇடும்இடம் |
|---|---|---|---|
| 1. அசுவினி | 9 | பயற்றன்னம் | குதிரைப்பந்தி |
| 2. பரணி | 5 | எள்ளுச்சாதம் | நாற்சந்தி |
| 3. கார்த்திகை | 7,21 | பயறு. உழுந்து சேர்ந்த அன்னம் | துர்க்கை ஆலயம் |
| 4. ரோகிணி | 5,11 | பாற்சாதம் | பிரம்மஸ்தானம் |
| 5. மிருகசீரிடம் | 6, 9 | சுத்தான்னம் | குளக்கரை |
| 6. * திருவாதிரை | 5, 45 | சிவந்த அன்னம் | கொன்றை மரத்தடி |
| 7. புனர்பூசம் | 13,27 | சுத்தான்னம் | விஷ்ணு ஆலயம் |
| 8. பூசம் | 7 | சுத்தான்னம் | மயானம் |
| 9. ஆயிலியம் | 6,10 | இளநீர் | புற்று |
| 10. மகம் | 4, 21 | எள்ளுச்சாதம் | மயானம் |
| 11. பூரம் | 21 | பயற்றன்னம் | காளி கோவில் |
| 12. உத்தரம் | 9 | சர்க்கரைப் பொங்கல் | சத்தமாதர் கோவில் |
| 13. அத்தம் | 7 | சுத்தான்னம் | சூரியன் ஆலயம் |
| 14. சித்திரை | 8, 27 | ஐவகைச்சாதம் | சித்திராலயம் |
| 15. சுவாதி | 10, 45 | துவரைச்சாதம் | காடு |
| 16. * விசாகம் | 21 | உழுந்துச்சாதம் | தடாகக்கரை |
| 17. அனுஷம் | 8, 15 | தேன்சாதம் | விருக்ஷத்தடி |
| 18. கேட்டை | 12 | மாவும் அன்னமும் | மூதேவியாலயம் |
| 19. மூலம் | 21 | சுத்தான்னம் | சிவாலயம் |
| 20. பூராடம் | 5, 10 | துவரைச்சாதம் | நீர்நிலைநடு |
| 21. உத்தராடம் | 30, 240 | நெய்ச்சோறு | மன்மதனாலயம் |
| 22. திருவோணம் | 8 | மோதகம். அன்னம் | சூரியனாலயம் |
| 23. அவிட்டம் | 10 | தயிர்ச்சாதம் | சிவாலயம் |
| 24. * சதயம் | 6, 12 | ஐவகைச்சாதம் | குளக்கரை |
| 25. பூரட்டாதி | 6, 12 | பழங்கலந்தசாதம் | கணேசராலயம் |
| 26. உத்திரட்டாதி | 14 | மாவும் அன்னமும் | சிவாலயம் |
| 27. ரேவதி | 8. 10 | உழுந்துசாதம் | சத்திரம் |

*குறிப்பு:* *திருவாதிரை, விசாகம், சதயம் இவற்றில் நோய் தொடங்கின் குறித்த நாள்வரை அது அசாத்தியமாம்.*

## 4.04 நோய் நட்சத்திரமும் தீரும் கால அளவும் – II

| நட்சத்திரம் | தீரும் கால அளவு |
|---|---|
| *1. அசுவினி* | *- 1 நாள் அல்லது 9 நாளில் தீரும்* |
| *2. பரணி* | *- 5, 11 அல்லது 20 நாளில் தீரும்* |
| *3. கார்த்திகை* | *- 7,9 அல்லது 2 மாதங்கள்* |
| *4. ரோகிணி* | *- 3, 7, 28 நாட்கள்* |
| *5. மிருகசீரிடம்* | *- 7, 12, 30 நாட்கள்* |
| *6. திருவாதிரை* | *- 6, 20 நாட்கள் அல்லது 7 மாதங்கள்* |
| *7. புனர்பூசம்* | *- 7, 15, 19 நாட்கள்* |
| *8. பூசம்* | *- 2, 7, 15 நாட்கள்* |
| *9. ஆயிலியம்* | *- 7,9 நாட்கள் அல்லது 6 மாதங்கள்* |
| *10. மகம்* | *- 8, 15, 21 நாட்கள்* |
| *11. பூரம்* | *- 11, 30 நாட்கள் அல்லது 2 மாதங்கள்* |
| *12. உத்தரம்* | *- 7, 22 நாட்கள் அல்லது 3 மாதங்கள்* |
| *13. அத்தம்* | *- 8, 15, 30 நாட்கள்* |
| *14. சித்திரை* | *- 7,15, நாட்கள் அல்லது 3 மாதங்கள்* |
| *15. சுவாதி* | *- 7, 10 நாட்கள் அல்லது 2 மாதங்கள்* |
| *16. விசாகம்* | *- 7,13 நாட்கள் அல்லது 1 மாதம்* |
| *17. அனுஷம்* | *- 6,10,13 நாட்கள்* |
| *18. கேட்டை* | *- 9, 13, 30 நாட்கள்* |
| *19. மூலம்* | *- 11, 15, 28 நாட்கள்* |
| *20. பூராடம்* | *- 8, 11 நாட்கள் அல்லது 1 மாதம்* |
| *21. உத்தராடம்* | *- 12, 30 நாட்கள் அல்லது 7 மாதங்கள்* |

| | | |
|---|---|---|
| 22. | திருவோணம் | 11, 20 நாட்கள் அல்லது 2 மாதங்கள் |
| 23. | அவிட்டம் | 8,10, 15 நாட்கள் |
| 24. | சதயம் | 7, 10, 20 நாட்கள் |
| 25. | பூரட்டாதி | 11, 25 நாட்கள் அல்லது 3 மாதங்கள் |
| 26. | உத்தரட்டாதி | 7, 14, 45 நாட்கள் |
| 27. | ரேவதி | 6, 8, 10 நாட்களில் தீரும். |

## 4. 05 சுரநட்சத்திரம் (சுரக்கோள்) I

சுரம் அல்லது காய்ச்சல் உண்டாகின்ற நட்சத்திரத்தைப் பொறுத்து அது எத்தனை நாளில் தீரும் அல்லது தீராது என்பன போன்ற விபரங்கள் சித்த மருத்துவநூல்களில் கூறப்பட்டுள்ளன. அவை வருமாறு:

| | சுரநட்சத்திரம் | | தீரும் நாட்கள் |
|---|---|---|---|
| 1. | அசுவினி | - | 7 அல்லது 9 நாளிகளில் தீரும் |
| 2. | பரணி | - | 5 அல்லது 8நாளிகளில் தீரும் |
| 3. | கார்த்திகை | - | 8 ஆம் நாளில் விடும். விடாவிடின் 20 ஆம் நாளில் மரணம். |
| 4. | ரோகிணி | - | 8அல்லது 20 ஆம் நாளில் தீரும். |
| 5. | மிருகசீரிடம் | - | 8 ஆம் நாளில் தீரும். |
| 6. | திருவாதிரை | - | 5 ஆம் நாளில் கஷ்டப்படுத்தும். 30 நாள் விடும் |
| 7. | புனர்பூசம் | - | 6 நாளில் விடும். |
| 8. | பூசம் | - | 2 அல்லது 8 ஆம் நாளில் விடும். |
| 9. | ஆயிலியம் | - | 7 ஆம் நாள் கஷ்டப்படுத்தும் 20 ஆம் நாளில் மரணம் ஏற்படும். |
| 10. | மகம் | - | 12 அல்லது 20 நாளில் தீரும். |
| 11. | பூரம் | - | 10 அல்லது 30 நாளில் விடும். |

12. உத்தரம் - 18 நாளில் விடும், அல்லாவிடின்
3 மாதத்தில் விடும்

13. அத்தம் - 2 அல்லது 15 நாளில் விடும்

14. சித்திரை - 8 நாளில் விடும் அல்லாவிடின்
- 3 மாதத்தில் விடும்.

15. சுவாதி - 6 நாள் அல்லது 17 நாளில் தீரும்.

16. விசாகம் - 8 நாளில் விடும் அல்லாவிடின்
- 1 மாதத்தில் விடும்.

17. அனுஷம் - 12 நாளில் விடும்.

18. கேட்டை - 5 அல்லது 30 நாளில் விடும்.

19. மூலம் - 5 அல்லது 20 நாளில் விடும்.

20. பூராடம் - 8 நாளில் விடும் விடாவிட்டால்
18 நாளில் மரணமுண்டாம்.

21. உத்தராடம் - 7 ஆம் நாளில் கடுமைப்படுத்தி
25 ஆம் நாளில் விடும்.

22. திருவோணம்- 7 நாளில் விடும் விடாவிடின்
7 மாதம் தொடரும்.

23. அவிட்டம் - 5 நாளில் மரணம் ஏற்படும். தப்பி
னால் 17 ஆம் நாளில் மாறும்.

24. சதயம் - 5 அல்லது 15 நாளில்மாறும்.

25. பூரட்டாதி - 7 ஆம் நாள் கடுமைப்படுத்தும்
15 ஆம் நாளில் மாறும்.

26. உத்தரட்டாதி - 7 நாளில் மாறும் மாறாவிடின்
15 ஆம் நாளில் மரணம் ஏற்படும்.

27. ரேவதி 8 ஆம் நாளில் மரணத்தை ஏற்
படுத்தும்.

## 4. 06 சுரநட்சத்திரம் II

| நட்சத்திரம் | | தீரும் தீராநிலைகள் |
|---|---|---|
| 1. அசுவினி | - | 8 நாளில் தீரும் |
| 2. பரணி | - | 9 நாளில் தீரும் அல்லது மரணம் |
| 3. கார்த்திகை | - | 7 நாளில் தீரும் அல்லாவிடின் 21 ஆம் நாளில் மரணம். |
| 4. ரோகிணி | - | 8அல்லது 21 நாளில் தீரும். |
| 5. மிருகசீரிடம் | - | 10 ஆம் நாளில் தீரும். |
| 6. திருவாதிரை | - | 5 அல்லது 7 நாளில் மரணம் |
| 7. புனர்பூசம் | - | 11 நாளில் விடும். |
| 8. பூசம் | - | 2 அல்லது 8 நாளில் விடும். |
| 9. ஆயிலியம் | - | 7 ஆம் நாளில் மரணம் |
| 10. மகம் | - | 10 அல்லது 13 நாளில் தீரும். |
| 11. பூரம் | - | 10 அல்லது 13 நாளில் தீரும். |
| 12. உத்தரம் | - | 11 நாளில் மரணம் அல்லது |
| | - | 3 மாதத்தில் மாறும். |
| 13. அத்தம் | - | 8 அல்லது 10நாளில் மாறும். |
| 14. சித்திரை | - | 3 நாளில் தணிவடைவது போல் தோன்றி மரணம். |
| 15. சுவாதி | - | மரணம் அல்லது தீரும். |
| 16. விசாகம் | - | 8 அல்லது 30 நாளில் மரணம். |
| 17. அனுஷம் | - | 5 நாளில் மரணம் |
| 18. கேட்டை | - | 9 நாளில் மரணம் |
| 19. மூலம் | - | 9 அல்லது 11 நாளில் தீரும். |
| 20. பூராடம் | - | 8 அல்லது 30 நாளில் தீரும். |
| 21. உத்தராடம் | - | 12 நாளில் அல்லது 7 மாதத்தில் மாறும். |

22. திருவோணம் - 8 நாளில் விடும். அல்லாவிடின் மரணம்.
23. அவிட்டம் - 8 நாளில் விடும். அல்லாவிடின் மரணம்.
24. சதயம் - 10 நாளில் விடும்.
25. பூரட்டாதி - 6 நாளில் மரணம்.
26. உத்தரட்டாதி - 8 நாளில் மரணம் இல்லாவிடின் 10 நாளில் மாறும்.
27. ரேவதி - 8 நாளில் மரணம் இல்லாவிடின் 10 நாளில் மாறும்.

## 4.07 அவமிருத்து நாளும் நட்சத்திரமும்

அதாவது மரணத்தை ஏற்படுத்தும் நாளும் நட்சத்திரங்களும் வருமாறு:

1. திங்கட்கிழமையும் திருவாதிரையும் கூடிய நாளில் சுரம் வந்தால் மரணம் ஏற்படும்.
2. ஞாயிற்றுக்கிழமையும் திருவோணமும் கூடிய நாளில் சுரம் வந்தாலும் மரணம் ஏற்படும்.
3. சனிக்கிழமையும் கார்த்திகையும் சேர்ந்த நாளில் சுரம் வந்தாலும் மரணம் ஏற்படும்.
4. வெள்ளிக்கிழமையும் விசாகநட்சத்திரமும் சேர்ந்த நாளில் சுரம்வரினும் மரணம்.
5. புதன்கிழமையும் ரேவதி நட்சத்திரமும் சேர்ந்த நாளில் சுரம்வரினும் மரணம்.
6. செவ்வாய்கிழமையும் சித்திரை நட்சத்திரமும் சேர்ந்த நாளில் சுரம் வரினும் மரணம் ஏற்படும்.

## 4.08 நோய்மிருத்து நாட்கள்

அதாவது இத்தினங்களில் நோய் ஏற்படின் மரணம் ஏற்படும் என்பதாம்.

1. பூரட்டாதி
2. கேட்டை
3. பரணி
4. கார்த்திகை
5. திருவாதிரை
6. சதயம்
7. அவிட்டம்
8. சுவாதி
9. ஆயிலியம் முதலிய நட்சத்திரங்களும்

1. நவமி
2. சதுர்த்தி
3. சஷ்டி
4. துவாதசி முதலிய திதிகளும்

1. செவ்வாய்
2. சனி
3. ஞாயிறு ஆகிய கிழமைகளும் சேர்ந்த நாட்களில் வியாதி உண்டானால் அந்த நோயாளி இறப்பார். என்பதாம்.

## 4.09 நோயுறினும் விஷந்தீண்டினும் ஆகாத நாட்கள்

1. திருவாதிரை
2. ஆயிலியம்
3. பூரம்
4. சுவாதி
5. கேட்டை
6. பூராடம்
7. பூரட்டாதி இந்நாட்களில் நோயுறின் அசாத்தியம்

1. அனுஷம்
2. ரேவதியில் நோயுறின் கஷ்டசாத்தியம்

1. பரணி
2. கார்த்திகை
3. திருவாதிரை
4. ஆயிலியம்
5. மகம்
6. விசாகம்
7. மூலம் இந்நாட்களில் விஷந்தீண்டின் தப்பாது.

## 4.10 நோய் தீரும், தீராத நாட்கள் (வேறு)

1. ஞாயிற்றுக் கிழமை - திருவோணத்திலும்
2. திங்கட்கிழமை - திருவாதிரையிலும்
3. செவ்வாய்க்கிழமை - சித்திரை - கார்த்திகை - பிரதமை சஷ்டி, ஏகாதசியிலும்
4. புதன்கிழமை - ரேவதி - ஆயிலியம் - துதியை, சப்தமி, துவாதசியிலும்

5. வியாழக் கிழமை - ரேவதி - மகம், திரிதியை அஷ்டமி - திரயோதசியிலும்,
6. வெள்ளிக்கிழமை- விசாகம் - அவிட்டம் - சதுர்த்தி - நவமி - சதுர்த்தசியிலும்,
7. சனிக்கிழமை - கார்த்திகை - பரணி - பஞ்சமி, தசமி, அமாவாசையிலும் நோய் ஏற்படின் தீராதாம்.

மேலும்,

1. ஒருவரின் ஜன்ம நட்சத்திரத்தில் நோய் ஏற்படின் 45 நாட்களில் தீரும்
2. ஜன்ம வாரத்தில் (கிழமை) நோய் ஏற்படின் - 28 நாட்களில் தீரும்.
3. ஜன்ம திதியில் நோய் ஏற்படின் 30 நாட்களில் தீரும்
4. ஜன்ம லக்கினத்தில் நோய் ஏற்படின் 12 நாட் களில் தீரும்.

1. ஞாயிற்றுக்கிழமையும் கார்த்திகை நட்சத்திரமும் கூடிய நாளில் நோய் ஏற்படின் 20 நாட்களில் தீரும்.
2. செவ்வாய்க் கிழமையும் கிருஷ்ண பட்ச சதுர்த் தசியும் சேர்ந்த நாளில் நோய் ஏற்படின் 45 நாட்கள் கடுமைப்படுத்தும்.
3. சனிக்கிழமையும் அட்டமியும் கூடிய நாளில் நோய் ஏற்படின் - 23 நாளில் தீரும்
4. பரணி நட்சத்திரமும், அமாவாசையும் கூடிய நாளில் நோயுறின் அது தீர 9 மாதங்கள் செல்லும்.

## 4.11 நோயுண்டாக்கும் கிரக அமைப்பு:-

1. சந்திரன் செவ்வாயுடன் சேர்ந்திருந்தால் இரத்த பித்தம், சுரம், அக்கினிமந்தம் முதலிய நோய் கள் ஏற்படும்.

2. 6 ஆம் வீட்டில் சந்திரன், சுக்கிரன் இருந்தாலும் அல்லது அவற்றின் பார்வை இருந்தாலும் இரைப்பை - குடற்புண், ஏற்படும்.

3. கடகராசியில் சூரியன் இருந்து, புதனால் பார்க் கப்பட்டால் கப சம்பந்தமான நோய்கள்ஏற்படும்.

4. வியாழனுடன் புதனிருந்து, சூரியனால் பார்க்கப் பட்டால் இரைப்பை - குடற்புண், சூலப்பிரமேகம், சிறுநீரகத்தில் கல் என்பன ஏற்படும்.

5. சந்திரனுடன் பாபக் கிரகங்களிலிருந்து, 7 வது வீட்டில் சனி இருந்தால் சுவாசம், சயம், இரைப் பை - குடற்புண் முதலிய நோய்கள் உண்டாகும்.

6. சிங்கராசியில் புதனிருந்தாலும் அல்லது புதனும் சூரியனும் சேர்ந்திருந்தாலும், அல்லது கடகரா சியில் புதன் இருந்தாலும் சயரோகம், குட்டம், பவுந்திரம், குருதிச்சோகை முதலியன உண்டாகும்.

7. கடகராசியில் (அதாவது சந்திரன் வீட்டில்) சூரியனிருந்து, சனியால் பார்க்கப்பட்டால் வாத நோய்கள் ஏற்படும்.

8. கடகராசியில் செவ்வாய் இருந்தால் இரத்த பித்தம் மற்றும் கெட்ட நோய்களுண்டாகும்.

9. தனுசு, மீனத்தில் (வியாழனின் வீட்டில்) பாபக் கிரகங்களிருப்பின் பசியின்மை மந்தாக்கினி நோய் உண்டாகும்.

10. 4 ஆம் வீட்டில் சனி இருந்தால் மார்புநோய், பாலியல் வியாதிகள் உண்டாகும்.

11. 8 ஆம் வீட்டில் வியாழன் இருந்தால் ஆமவாத நோய் உண்டாகும்.

12. 8 ஆம் வீட்டில் செவ்வாயும் சூரியனும் இருந்தால் தாகநோய், காய்ச்சல் என்பன உண்டாகும்.

13. 8 ஆம் வீட்டில் சனி, செவ்வாய், சூரியன் இருந் தால் காக்கைவலிப்பு, மற்றும் பலவித நோய்கள் உண்டாகும்.

14. 7 ஆம் வீட்டில் சனியும், இராகுவும் சேர்ந்திருந் தால் மூத்திர சம்பந்தமான நோய்கள் உண்டாகும்.

15. ஜாதகத்தில் சூரியன் நீசமடைந்திருந்தால் சூரிய திசை நடக்கும்போது கண்பார்வையை இழக்க நேரிடும்.

அவ்விதமே தேய்பிறையில் பிறந்தவர்களுக்கு சந்திர திசை நடக்கும் போது கண் பார்வை கெடும்.

(சூரிய சந்திரர்கள் முறையே வலது, இடது கண் களுக்கு அதிபதிகள் என்பதை நினைவிற் கொள்க.)

## 4.12 ஜாதகப்படி நோயை நிதானித்தல்

*ஏற்கெனவே குறிப்பிட்டது போல 6ஆம், 8 ஆம், 12 ஆம் வீடுகளைப் பற்றி அவற்றின் அதிபதிகள் - அவ்வீடுகளில் உள்ள கிரகங்கள் - அவ்வீடுகளுக்கு மற்றக் கிரகங்களால் ஏற்படும் பார்வை போன்ற பலவிடயங்களை கருத்திற் கொண்டு ஏற்படக்கூடிய நோய்களை கண்டறிய வேண்டும்.*

*பொதுவாக 6 ஆம் வீட்டைக் கொண்டு ஒருவருக்கு ஏற்படக்கூடிய நோய்களையும், 8 ஆம் வீட்டைக் கொண்டு அவ்வியாதிகளால் ஏற்படக் கூடிய உபத்திர வங்களையும்* (Complications), *12 ஆம் வீட்டைக் கொண்டு அவ்வியாதிக்குரியவர் மருத்துவமனையில் தங்கியிருந்து சிகிச்சை பெறும் நிலை பற்றியும் ஆராய்ந்தறியலாம் என்று சோதிட நூல்கள் கூறுகின் றன. மேலும் இராசி அங்கங்கள், கிரக அங்கங்கள் என்பவற்றையும் கவனத்திற் கொள்ளல் அவசிய மாகும்.*

*உதாரணமாக, ரோகஸ்தானம் மேடராசியாக இருந்தால் அது தலையைக் குறிப்பதால் சிரசு, மூளை சம்பந்தமான நோய்களையும் இடபராசியாக இருந்தால் கழுத்து, தொண்டை சம்பந்தமான நோய் களையும், மிதுனராசியாக இருந்தால் சுவாச சம்பந் தமான நோய்களையும் கடகராசியாக இருப்பின் மார்பு மார்பகம் சம்பந்தமான நோய்களையும் சிங்க ராசியாக இருப்பின் இருதய சம்பந்தமான நோய் களையும், கன்னிராசியாக இருப்பின் வயிறு சம்பந்த மான நோய்களையும் துலாராசியாக இருப்பின் இடுப்பு சம்பந்தமான நோய்களையும் அதனுள் அடங்கியுள்ள*

சிறுநீரகம், குடல்வளரி போன்ற உறுப்புகளில் ஏற் படும் நோய்களையும், விருச்சிகராசியாக இருந்தால் பிறப்புறுப்புகள், சிறுநீரகம் சம்பந்தமான உறுப்புக் களில் ஏற்படும் நோய்களையும், தனுசு ராசியாக இருப் பின் தொடைப்பகுதி சம்பந்தப்பட்ட நோய்களையும், மகரராசியாக இருப்பின் மூட்டுக்கள் குறிப்பாக முழங் கால் மூட்டுக்கள், தோல் சம்பந்தப்பட்ட உறுப்புகளில் ஏற்படும் நோய்களையும், கும்பராசியாக இருப்பின் வலிப்பு, வாத நோய்களையும், மீன ராசியாக இருப்பின் காலில் ஏற்படும் நோய்களையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

அவ்விதமே, கிரக அங்கங்களால் ஏற்படும் நோய் களையும் கவனத்தில் கொள்ளல் வேண்டும். உதாரண மாக, சூரியன், சந்திரன், சுக்கிரன் கண்பார்வையுடன் சம்பந்தப்பட்ட கிரகங்களாகும். இவற்றின் பாதிப்பால் கண்சம்பந்தமான நோய்கள் ஏற்படலாம்.

சந்திரன் மனம், இருதயம் என்பவற்றை ஆட்சி செய்வதால் சந்திரனின் பாதிப்பினால் மனம், இருத யம் சம்பந்தமான நோய்கள் ஏற்படலாம்.

செவ்வாய் இரத்த சம்பந்தமான நோய்களையும் புதன் நரம்பு மண்டலத்துக்கு அதிபதியாக மூளை, வாக்கு(பேச்சு), உடலுறுப்புகளை ஆள்வதால் இதன் பாதிப்பால் பாரிசவாதம் முதலான வாத நோய்கள் ஏற்படலாம்.

வியாழன் கட்டி, புதுவளரி முதலியனவற்றையும், வெள்ளி கர்ப்பாசய சம்பந்தமான நோய்களையும் ஏற் படுத்தலாம். சனியினால் கர்மநோய்கள் ஏற்படலாம். இராகு, கேதுவினால் குழந்தையின்மை முதலான பிரச்சினைகள் ஏற்படலாம். இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து நோயை நிர்ணயிக்க வேண்டும்.

# பகுதி - V

## 5.01 வைத்தியம் செய்வதற்கு உகந்த நாட்கள்

*வைத்தியம் செய்வதற்கு நாள், நட்சத்திரம், திதி, மாதம், முதலிய பல விடயங்களைப் பார்த்தல் அவசியம் என சித்தர்கள் கூறி வைத்துள்ளனர். ஏனெனில் சில நாள், நட்சத்திரம், திதிகளில் வைத்தியம் செய்யத் தொடங்கினால் நோய் எளிதில் குணமடையும். சில நாள், நட்சத்திரம் முதலியவற்றில் தொடங்கப்படும் வைத்தியம் நோயைத் தணிக்காது அலைக்கழிக்கும். வைத்தியம் சித்திக்காது. வைத்தியம் செய்வதற்கு உகந்த நாட்களாவன:*

| | நாள் | | தன்மை |
|---|---|---|---|
| *1.* | *ஞாயிற்றுக்கிழமை* | - | *உத்தமம்* |
| *2.* | *திங்கட்கிழமை* | - | *உத்தமம்* |
| *3.* | *செவ்வாய்க்கிழமை* | - | *மத்திமம்* |
| *4.* | *புதன்கிழமை* | - | *அதமம்* |
| *5.* | *வியாழக்கிழமை* | - | *மத்திமம்* |
| *6.* | *வெள்ளிக்கிழமை* | - | *மத்திமம்* |
| *7.* | *சனிக்கிழமை* | - | *அதமம்* |

*எமது பிரதேசத்தில் ஞாயிறு, செவ்வாய், வியாழக்கிழமை ஆகிய மூன்று நாட்களையும் மருத்துவம் பார்க்கவும் மருந்துண்ண ஆரம்பிக்கவும் உத்தமமான நாட்களாகக் கருதுகின்றனர். வெள்ளிக் கிழமை முழுவதுமாக விலக்கப்படுகிறது.*

## 5.02 வைத்தியம் செய்ய உகந்த திதிகள்

| | திதி | | தன்மை |
|---|---|---|---|
| 1. | பிரதமை | - | அதமம் |
| 2. | துவிதியை | - | உத்தமம் |
| 3. | திரிதியை | - | மத்திமம் |
| 4. | சதுர்த்தி | - | உத்தமம் |
| 5. | பஞ்சமி | - | உத்தமம் |
| 6. | சஷ்டி | - | அதமம் |
| 7. | சப்தமி | - | உத்தமம் |
| 8. | அட்டமி | - | உத்தமம் |
| 9. | நவமி | - | அதமம் |
| 10. | தசமி | - | உத்தமம் |
| 11. | ஏகாதசி | - | அதமம் |
| 12. | துவாதசி | - | மத்திமம் |
| 13. | திரயோதசி | - | மத்திமம் |
| 14. | சதுர்த்தசி | - | அதமம் |
| 15. | அமாவாசை | - | அதமம் |
| 16. | பௌர்ணமி | - | மத்திமம் |

## 5.03 வைத்தியஞ் செய்ய உகந்த நட்சத்திரங்கள்

| | நட்சத்திரம் | | தன்மை |
|---|---|---|---|
| 1. | அசுவினி | - | உத்தமம் |
| 2. | பரணி | - | மத்திமம் |
| 3. | கார்த்திகை | - | மத்திமம் |
| 4. | ரோகிணி | - | மத்தியம் |
| 5. | மிருகசீரிடம் | - | மத்திமம் |
| 6. | திருவாதிரை | - | அதமம் |

7. புனர்பூசம் - அதமம்
8. பூசம் - அதமம்
9. ஆயிலியம் - உத்தமம்
10. மகம் - மத்திமம்
11. பூரம் - அதமம்
12. உத்தரம் - அதமம்
13. அத்தம் - அதமம்
14. சித்திரை - அதமம்
15. சுவாதி - மத்திமம்
16. விசாகம் - அதமம்
17. அனுஷம் - அதமம்
18. கேட்டை - உத்தமம்
19. மூலம் - மத்திமம்
20. பூராடம் - அதமம்
21. உத்தராடம் - அதமம்
22. திருவோணம் - மத்திமம்
23. அவிட்டம் - அதமம்
24. சதயம் - உத்தமம்
25. பூரட்டாதி - உத்தமம்
26. உத்தரட்டாதி - அதமம்
27. ரேவதி - மத்திமம்

## 5.04 வைத்தியம் செய்வதற்கு உகந்த இலக்கினங்கள்

| இலக்கினம் | தன்மை |
|---|---|
| 1. மேடம் | மத்திமம் |
| 2. இடபம் | மத்திமம் |

| | | | |
|---|---|---|---|
| 3. | மிதுனம் | - | அதமம் |
| 4. | கடகம் | - | உத்தமம் |
| 5. | சிங்கம் | - | அதமம் |
| 6. | கன்னி | - | மத்திமம் |
| 7. | துலாம் | - | மத்திமம் |
| 8. | விருச்சிகம் | - | அதமம் |
| 9. | தனுசு | - | மத்திமம் |
| 10. | மகரம் | - | மத்திமம் |
| 11. | கும்பம் | - | உத்தமம் |
| 12. | மீனம் | - | மத்திமம் |

## 5.05 வைத்தியஞ் செய்ய உகந்த மாதங்கள்

| | மாதம் | | தன்மை |
|---|---|---|---|
| 1. | சித்திரை | - | உத்தமம் |
| 2. | வைகாசி | - | உத்தமம் |
| 3. | ஆனி | - | மத்திமம் |
| 4. | ஆடி | - | மத்திமம் |
| 5. | ஆவணி | - | அதமம் |
| 6. | புரட்டாதி | - | அதமம் |
| 7. | ஐப்பசி | - | அதமம் |
| 8. | கார்த்திகை | - | அதமம் |
| 9. | மார்கழி | - | அதமம் |
| 10. | தை | - | அதமம் |
| 11. | மாசி | - | அதமம் |
| 12. | பங்குனி | - | அதமம் |

## 5.06 அறுவை வைத்தியத்துக்கு உகந்த நாட்கள்

புண்ணறுத்தல், சுடுதல், காரமிடுதல், அட்டை விடுதல் போன்ற இரண வைத்தியம் செய்வதற்கு பின்வரும் நாட்கள் உகந்தனவாம்.

1. ஆயிலியம்
2. திருவாதிரை
3. மூலம்
4. கேட்டை நட்சத்திரங்களும்

1. ஞாயிறு
2. சனி
3. செவ்வாய்க் கிழமைகளும்

1. சதுர்த்தி
2. நவமி
3. சஷ்டி
4. அட்டமி
5. துவாதசி
6. சதுர்த்தசி ஆகிய திதிகளும்

கன்னி, துலாம், மேடம், கடகம் ஆகிய இராசி உதயத்தில் 8 ஆம் இடம் சுத்தியாக இருக்கையில் அறுவை வைத்தியம் செய்யலாம்.

ஆயினும், தற்காலத்தில் அறுவைச் சிகிச்சை செய்வதற்கு சுப நாள் நட்சத்திரங்கள் பார்ப்பது வழக்கமாகவுள்ளது.

## 5.07 திதிகளும் அட்டை விடுதலும்

*சித்த, ஆயுர்வேத வைத்தியமுறைகளில் சில நோய் நிலைகளின் போது உடலிலுள்ள அசுத்த இரத்தத்தை வெளியகற்றுவதற்காக அட்டைகளை குறித்த ஸ்தானங்களில் கடிக்கவிட்டு இரத்தத்தை உறிஞ்சவைப்பது வழக்கம். இதனை அட்டைவிடுதல் என்பர். இம்முறை கொழும்பு பொரளை ஆயுர்வேத வைத்தியசாலையிலும், இந்திய ஆயுர்வேத வைத்திய சாலைகள் சிலவற்றிலும் தற்போதும் வழக்கிலுள்ளன. பின்வரும் உடலுறுப்புகளில் பின்வரும் திதிகளில் அட்டைவிடின் மரணம் ஏற்படும் என்று மருத்துவ, சோதிடநூல்கள் கூறுகின்றன. காரணம் குறித்த திதியில் அந்த இடங்களில் அமுதம் ஏறி நிற்குமாம்.*

| | **திதி** | | **இடம்** |
|---|---|---|---|
| 1. | பிரதமை | - | பெருவிரலில் விடக்கூடாது. |
| 2. | துவிதியை | - | உள்ளங்கால் |
| 3. | திரிதியை | - | முழங்கால் |
| 4. | சதுர்த்தி | - | தொடை |
| 5. | பஞ்சமி | - | குய்யம் (பிறப்புறுப்பு) |
| 6. | சஷ்டி | - | நாபி |
| 7. | சப்தமி | - | மார்பு |
| 8. | அட்டமி | - | கை |
| 9. | நவமி | - | கழுத்து |
| 10. | தசமி | - | கீழ்உதடு |
| 11. | ஏகாதசி | - | நாக்கு |
| 12. | துவாதசி | - | நெற்றி |
| 13. | திரயோதசி | - | புருவம் |
| 14. | சதுர்த்தசி | - | பிடரி |
| 15. | பௌர்ணமி, அமாவாசை | - | உச்சி |

## 5.08 அமாவசை, பௌர்ணமி

அமாவாசை, பௌர்ணமியின் போது சந்திரன் பூமிக்கு மிகவும் அருகில் வரும். அச்சமயம் அதன் ஆற்றல் பூமியையும் அதிலுள்ள மனிதரையும் பெரிதும் பாதிக்கும்.

சூரியனையும், பூமியையும் சந்திரனையும் இணைக்கும் வகையில் 'ட' மாதிரி ஒரு கோடு வரைந்தால் அது $90^{\circ}$யில் வரும். வளர்பிறையில் ஒரு தடவையும், தேய்பிறையில் ஒரு தடவையும் இவ்விதம் வரும். இதுவே அட்டமி திதியாகும். இங்ஙனம் $90^{\circ}$யில் கிரகங்கங்கள் வரும்போது அவை ஒன்றுக்கொன்று எதிர்ப்புச் சக்தியுள்ள கிரகணங்களை (கதிர்களை) ஏவுகின்றன. அவை தீமைபயக்கக் கூடியவை. எனவே தான் அட்டமி, நவமி ஆகா நாட்களாக கருதப் படுகின்றன.

அமாவாசை, பௌர்ணமி, அட்டமி, நவமி திதிகளில் சந்திரனால் உடலில் பாதிப்பு அதிகம் ஏற்படுவதால் பைத்தியம், விஷக்கடி மற்றும் சிலவகை நோய்களின் தீவிரத்தன்மை இத்தினங்களில் அதிகரித்துக் காணப்படுகின்றன. இதை அனுபவத்தில் ஒருவர் அறிந்து கொள்ளமுடியும்.

விதிவிலக்காக, அமாவாசையன்று மூலரோகத்துக்கு மருந்துண்ண ஆரம்பித்தால் நன்மை ஏற்படும் என்று சாத்திர நூல்கள் கூறுகின்றன.

## 5.09 மருந்துண்ண உகந்த நாட்கள் - I

1. அனுஷம்
2. அத்தம்
3. சித்திரை
4. சுவாதி
5. மிருகசீரிடம்
6. அவிட்டம்
7. புனர்பூசம்
8. பூரம்
9. உத்தரட்டாதி
10. சதயம்
11. ரோகிணி
12. திருவோணம்
13. ரேவதி

நட்சத்திர நாட்களில் சரராசி உதயமாகியிருக்கையில் அதாவது மேடம், கடகம், துலாம், மகரராசி உதயமாகியிருக்கையில் 3, 6, 7, 8 ஆம் இடங்கள் சுத்தமாக இருக்க மருந்துண்ண ஆரம்பிக்கலாம்.

ஒருவரின் ஜன்ம நட்சத்திரமும், இதில் சொல்லப்படாத நட்சத்திரங்களும் ஆகாவாம்.

பொதுவாக செவ்வாய், வியாழன், ஞாயிற்றுக் கிழமைகளில் மருந்துண்ண ஆரம்பித்தல் நன்றாம்.

## 5.10 மருந்துண்ண உகந்த நாட்கள் – II

1. அசுவினி
2. ரோகிணி
3. மிருகசீரிடம்
4. புனர்பூசம்
5. பூசம்
6. உத்தரம்
7. அத்தம்
8. சித்திரை
9. சுவாதி
10. அனுஷம்
11. உத்தராடம்
12. திருவோணம்
13. அவிட்டம்
14. சதயம்
15. உத்தரட்டாதி
16. ரேவதி

நட்சத்திரங்களில் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி வாரோதயங்களில் சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி திதிகளில் மேடம், கடகம், கன்னி, துலாம், மகர லக்கினங்களில் 6-7-8 ஆம் இடங்கள் சுத்தமாக இருக்க மருந்துண்டால் நோய் தீரும்.

## 5.11 சுரம், சன்னிக்கு மருந்துண்ணல்

1. அசுவினி
2. புனர்பூசம்
3. அத்தம்
4. சித்திரை நட்சத்திரங்களில்

1. திங்கள்
2. புதன்
3. வெள்ளி
4. சனி வாரோதயங்களில்

1. மேடம்
2. கடகம்
3. துலாம்
4. மகரராசிகளும் (சரராசிகள்) அம்சங்களும்

பொருந்த சுரத்துக்கு மருந்துண்ணலாம்

1. பரணி
2. திருவாதிரை
3. விசாகம்
4. அனுஷம் நட்சத்திரங்களில்

1. திங்கள்
2. ஞாயிற்றுகிழமைகளில்

1. சதுர்த்தி
2. நவமி
3. சதுர்த்தசி திதிகளில் **சன்னிக்கு** மருந்துண்ணலாம்.

## 5.12 வாத பித்த கப ரோகங்களுக்கு மருந்துண்ணல்

1. அசுவினி
2. ஆயிலியம்
3. திருவோணம் நட்சத்திரங்களில்

1. திருதியை
2. அட்டமி
3. திரயோதசி திதிகளில்
   வியாழன் வாரோதயத்தில் **வாதரோகத்துக்கு** மருந்துண்ணலாம்.

1. பூசம்
2. சுவாதி
3. மூலம் நட்சத்திரங்களில்

1. பிரதமை
2. சஷ்டி
3. ஏகாதசி திதிகளில்
   வியாழன் வாரோதயத்தில் **பித்தரோகத்துக்கு** மருந்துண்ணலாம்.

1. பரணி
2. கார்த்திகை
3. திருவாதிரை
4. மூலம் நட்சத்திரங்களில்

1. மேடம்
2. கடகம்
3. துலாம்
4. மகர ராசிகளில் (சரராசிகள்)
   செவ்வாய் வாரோதயத்தில் **கபத்துக்கு** மருந்துண்ணலாம்.

(சரராசி - அசைவுள்ளது. தோஷங்கள் அசைந்து வெளியாகும்)

குறிப்பு: *சனிக்கிழமையின் கடைசி ஹோரையான சரக் கிரகமான செவ்வாய் ஹோரையில் சரக்கிரக மான இராகு காலத்தில் (அதாவது அதிகாலை 5 - 6 மணிக்கு இடையில் பேதிக்கு மருந்து கொடுப்பதால் நன்கு பேதியாகும். எனவே தான் ஞாயிறு அதிகாலையில் பேதி மருந்து கொடுப்பது வழக்கம்.*

## 5.13 சகல வியாதிக்கும் மருந்துண்ணல்

1. *திருவாதிரை*
2. *மகம்*
3. *விசாக நட்சத்திரத்தில்* **பெரு வயிற்றிற்கும்**

1. *பரணி*
2. *மிருகசீரிடம்*
3. *ஆயிலிய நட்சத்திரத்தில்* **பைத்தியத்திற்கும்** *செவ் வாய்க்கிழமையில் மருந்துண்ண ஆரம்பிக்கவும்.*

1. *கார்த்திகை*
2. *விசாகம்*
3. *பூராடம்*
4. *அவிட்டம்*
5. *சதயம்*
6. *பூரட்டாதி நட்சத்திரங்களில் விட்டாடிக் கரணத் துடன் சேராத திதிகளில், இலக்கினத்தைச் செவ் வாய்நோக்க* **சயரோகத்துக்கு** *மருந்துண்ணலாம்.*

2. *சூரியன், செவ்வாய், சனி, 1 - 4 - 7 - 10 இடங் களில் நிற்க* **சகலவியாதிக்கும்** *மருந்துண்ண லாம்.*

3) *மருந்துண்ண ஆரம்பிக்கும்போது ஜாதகத்தில் மூன்றாமிடத்தில் பாபக் கிரகங்கள் அல்லது அவற்றின் பார்வை இல்லாதிருக்க வேண்டும்.*

## 5.14 பிரமேகத்துக்கும் குட்டத்துக்கும் மருந் துண்ணல்

1. புனர்பூசம்
2. சுவாதி
3. திருவோணம்
4. பரணி
5. மகம்
6. பூரம்
7. அசுவினி
8. பூசம்
9. அத்தம் என்ற நட்சத்திரங்களிலும், புதன் வாரத் திலும், சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி திதிகளிலும் **பிரமேகங்களுக்கு** மருந்துண்ணலாம்.

திதி, வார, நட்சத்திர ராசியெல்லாம் பொல்லா தனவாயுற லக்கினத்துக்கும் 8 இலும் பாபர் நிற்க குட்டரோகத்துக்கு மருந்துண்ணல் நன்றாம்.

## 5.15 சஞ்சீவினி மருந்துண்ணல்

1. பரணி
2. திருவாதிரை
3. விசாகம்
4. அனுஷம் நட்சத்திரங்களில்

1. சதுர்த்தி
2. நவமி
3. சதுர்த்தசி திதிகளில், ஞாயிற்றுக்கிழமையில் சஞ்சீவினி மருந்துண்ணலாம், உடல் தைரியம் புஷ்டி என்பவற்றுக்கு இந்நாட்களில் மருந்து சாப்பிடத் தொடங்கலாம்.

## 5.16 தைலாப்பியங்கத்துக்கு உகந்த நாட்கள்

1. திங்கள்
2. புதன்
3. சனிக்கிழமைகள் நன்றாம், சுமங்கலிப் பெண்களுக்கு செவ்வாய், வெள்ளிக்கிழமைகளும் நன்றென்பர். இத்தினங்களில் எண்ணெய் தேய்த்து குளித்தல் நன்றாம்.

1. ஜன்ம நட்சத்திரம்
2. ஜன்மத்திரயம்
3. உத்தரம்
4. கேட்டை
5. திருவாதிரை
6. திருவோணம் நட்சத்திரங்களும்

1. அட்டமி
2. பிரதமை
3. சஷ்டி
4. ஏகாதசி
5. சதுர்த்தசி
6. பூரணை
7. அமாவாசை
8. துவாதசி ஆகிய திதிகளும் இராக்காலம், மாதப் பிறப்பு என்பனவும் எண்ணெய் ஸ்நானம், தைலாப் பியங்கத்துக்கு ஆகாத நாட்களாம்.

## 5.17 நோய்மாறியவர் குளிப்பதற்கு உகந்த நாட்கள்

1. புனர்பூசம்
2. ரேவதி
3. சுவாதி
4. உத்தரட்டாதி
5. மகம்
6. ஆயிலியம்
7. ரோகிணி நட்சத்திரங்களும், திங்கள், வெள்ளிக் கிழமைகளும் சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி, தசமி திதிகளில் நோய்மாறியவர் குளித்தல் நன்றாம்.

## 5.18 ஹோரை (ஓரை)

காலையில் சூரிய உதயம் முதல் 1 மணிநேரத் துக்கு எந்தக் கிரகத்தின் சக்தி பூமியின்மேல் விழுகிறதோ அது அதிகமான ஆகர்ஷண சக்தியைக் கொண்டிருக்கும். அந்தநேரத்தைக் அக்கிரகத்துக் குரிய ஹோரை என்பர். ஒவ்வொரு நாளும் சூரிய உதய காலத்தில் எந்தக் கிரகத்தின் கதிர்வீச்சு அதிக மாக உள்ளதோ அந்தக் கிரகத்தின் பெயரையே அந்த நாளுக்குச் சூட்டியுள்ளனர்.

உதாரணமாக:

சந்திர ஹோரை - திங்கட்கிழமை,
செவ்வாய் ஹோரை - செவ்வாய்க்கிழமை.

ஒவ்வொரு நாளும் அடுத்தடுத்துவரும் ஹோரையை பின்வரும் அட்டவணையிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

# ஹோரை அட்டவணை

| வாரம் | 6-00 முதல் 7-00 வரை | 7-00 முதல் 8-00 வரை | 8-00 முதல் 9-00 வரை | 9-00 முதல் 10-00 வரை | 10-00 முதல் 11-00 வரை | 11-00 முதல் 12-00 வரை | 12-00 முதல் 1-00 வரை | 1-00 முதல் 2-00 வரை | 2-00 முதல் 3-00 வரை | 3-00 முதல் 4-00 வரை | 4-00 முதல் 5-00 வரை | 5-00 முதல் 6-00 வரை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பகல் | | | | | | | | | | | | |
| ஞாயி | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி |
| திங்க | சந்திர | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய |
| செவ் | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி |
| புதன் | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் |
| வியா | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் |
| வெள் | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு |
| சனி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி |
| இரவு | | | | | | | | | | | | |
| ஞாயி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் |
| திங் | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு |
| செவ் | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி |
| புதன் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி |
| வியா | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய |
| வெள் | செவ் | சூரி | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புதன் | சந்தி |
| சனி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் | சூரிய | சுக்கி | புதன் | சந்தி | சனி | குரு | செவ் |

* சூரிய உதயம்முதல் 1 மணித்தியாலம் என்ற அளவில் ஹோரை ஆரம்பமாகும் என்பதை நினைவிற் கொள்ளவும்.

ஒவ்வொருவரும் ஹோரையைப்பார்த்து வேலையை ஆரம்பித்தல் மிகவும் நலம். முயற்சிக்கப்பட்ட வேலை திருப்திகரமாகக் கட்டாயம் முடியும். இது அனுபவ உண்மையாகும்.

**சூரிய ஹோரை:-** உத்தியோகம், வியாபாரம் செய்ய. ஒருவருடைய தயவுபெற, பெரிய உத்தியோகத் தரைக் காண.

**சந்திர ஹோரை:-** வியாபாரம், ஸ்திரிகளைப்பற்றி பேசுவது, கேள்விகள் கேட்பது, பிரயாணம், கப்பல் யாத்திரை செய்வது, ஒருவரை (மாத்ருவர்க்கத் தாரைக்) காண்பது உசிதம். தேய்பிறைச் சந்திரனால் கஷ்டம் நேரும்.

**செவ்வாய் ஹோரை:-** உள்ளக் கருத்துக்களை மறைமுகமாக வைப்பது நலம், யோசிக்காமல் வெளி யிடுவது துன்பம், ஆதலால் இக்காலத்தில் எதையும் செய்தல் கூடாது.

**புத ஹோரை:-** தந்திகள் அனுப்பவும், வக்கீல் களைப் பார்க்கவும், எல்லாவித எழுத்து வேலைகளுக் கும், பரீக்ஷை எழுதவும், ஜோதிஷ விஞ்ஞான ஆராய்ச்சிகள் செய்ய, அம்மான் வர்க்கத்தாரைப்பற்றி பேச நலம்.

**குரு ஹோரை:-** எல்லாவற்றிற்கும் நலம். பணக் காரர் தயவை நாடுவது, எல்லா ~ரமான்களையும்

வாங்குவது, உத்தியோகங்கள், பணவிஷய விபரங் களைத் தொடங்க, ஆடை ஆபரணங்கள் சேர்க்க, காரியங்கள் தடையின்றி நடக்க, கடன்களைப் பெறு வது, ஷாப் வியாபாரிகளுக்கும், கிருஷிக லாபங் களுக்கும் இந்த ஹோரை மிகவும் சிறந்தது.

**சுக்கிர ஹோரை:-** எல்லா சுபவேலைகள் நடத்த, பெண்களைப்பற்றிப்பேச, கால நிகழ்ச்சிகளுக்கு, பிறர் தயவைப்பெறுவதற்கு, விருந்துண்பதற்கு, கடன் வசூல் செய்ய, **மருந்துண்பதற்கு,** வாகனங்கள் வாங்க களத்திர வர்க்கத்தாரோடு பேச இவ்வோரை மிக்க நலம்.

**சனி ஹோரை:-** இவ்வோரை மிகக் கொடியது, இருந்தபோதிலும் நில்ங்கள், அவை சம்பந்தப்பட்ட சொத்துக்களைப்பற்றி நடவடிக்கை எடுக்க, தோப்பு துரவுகளைப்பற்றிப் பேசவும் நல்லது.

ஹோரையைப் பார்த்து வேலையை ஆரம்பிப் பதால் நன்மையுண்டாகும். முயற்சி செய்யும் வேலை திருப்திகரமாக அமையும். வைத்தியரிடம் செல்லுதல், மருந்துண்ண ஆரம்பித்தல் என்பவற்றுக்கு ஹோரை பார்த்துச் செய்தல் நன்று. **சுக்கிர ஹோரை மருந்துண்ண மிகவும் உகந்தாகக் கூறப்படுகிறது.**

மேலும் மூலிகைகள் சேகரிக்கச் செல்லும் போதும், மருந்து தயாரிக்கும்போதும் சுபஹோரை பார்த்துச் செய்தல் நன்மை பயக்கும்.

பொதுவாக புதன், குரு, சுக்கிர ஹோரை எல்லாவற்றுக்கும் நன்று.

# பகுதி VI

6.01 சித்தரும் சோதிடமும்

6.02 நட்சத்திரங்களும் அதிதேவதைகளும்

6.03 கிரகங்களும் அதிதேவதைகளும்

6.04 நவக்கிரக சாந்தி

6.05 நாக சாந்தி.

## 6.01 சித்தரும் சோதிடமும்

பதினெண் சித்தர்களில் இடைக்காட்டுச் சித்தரும் ஒருவராவர். அவரைப்பற்றி சோதிடத்துடன் சம்பந்தப் பட்ட சுவாரசியமான கதை ஒன்றுள்ளது. இடைக் காட்டுச் சித்தரின் தொழில் ஆடு மேய்த்தலாகும். அவர் சிறந்த சோதிடர். ஒரு தடவை அவர் கிரகங் களை வைத்துக் கணக்குப் பார்க்கையில் விரைவில் பெரிய பஞ்சம் ஒன்று ஏற்படப் போவதையும் மழை யின்றி புல்பூண்டுகள் யாவும் அழிந்து பசுமையற்றுப் போகப்போவதையும் கண்டார். அதிலிருந்து தப்பிப் பிழைப்பதற்கான மார்க்கம் பற்றி அவர் சிந்தித்தார். தனது ஆடுகளுக்கு வரட்சிக் காலத்திலும் தப்பி பிழைத்திருக்கக் கூடிய எருக்கலம் இலைகளையே உணவாகப் போட்டு உண்ணப்பழக்கினார். கேழ் வரகைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேகரித்து மண் ணுடன் கலந்து அதனால் சுவரமைத்து தனக்கு ஒரு குடிசையுங் கட்டிக் கொண்டார். இவ்விதம் அவர் பல ஆண்டுகள் முயற்சியிலீடுபட்டார். கடைசியாக அவர் எதிர்பார்த்த பஞ்சமும் வந்தது. பயிர் பச்சை யெல்லாம் வாடிக்கருகி விட்டன. உணவின்றி மனி தரும் மிருகங்களும் பேரழிவுக்குள்ளாகின. ஆனால் இடைக்காட்டுச் சித்தர் முன்யோசனையுடன் நடந்து கொண்டமையால் அவரின் ஆடுகள் எருக்கலம் இலை களைத் தின்று தப்பிப்பிழைத்தன. அவ்வாடுகள் தினவு எடுத்தபோது குடிசைச் சுவரில் முதுகைத் தேய்த்தன. அப்போது மண்ணுடன் சேர்ந்திருந்த கேழ்வரகு விதைகள் உதிர்ந்து விழும். அவற்றைச்

சேகரித்து சுத்தப்படுத்தி, ஆட்டுப் பாலுடன் சேர்த்து கஞ்சி செய்து சித்தர் உண்டு வந்தார். பஞ்சத்தின் தாக்கம் அவரையோ, அவரது ஆடுகளையோ பாதிக்கவில்லை.

வானத்திலிருந்த நவகோள் நாயகர்களும் இதனைக் கண்டு ஆச்சரியப்பட்டனர். அதற்கான காரணத்தை சித்தரிடமே கேட்டறிய எண்ணி அவரின் குடிசைக்கு வந்தனர். நவக்கிரக நாயகர்களையும் சித்தர் அன்புடன் வரவேற்று தக்கபடி உபசரித்து கேழ்வரகுக் கஞ்சி கொடுத்து விருந்து வைத்தார். விருந்துண்ட நவக்கிரக நாயகர்களும் உண்ட மயக்கத்தினால் அவர் குடிசையிலேயே தூங்கிப்போயினர். உலக சீவராசிகளின் மீது கருணைமிக்க இடைக்காட்டுச் சித்தர் தமது மனதுள் கணக்குப் போட்டு நவக்கிரகங்களை எந்த ஒழுங்கில் மாற்றியமைத்தால் மழைவந்து பஞ்சந்தீரும் எனச் சிந்தித்து, அதன்படி தூங்கிக் கொண்டிருந்த நவக்கிரக நாயகர்களை மாற்றிக் கிடத்திவிட்டார். உடனே பெருமழை பெய்து, பஞ்சமும் நீங்கியது, நவக்கிரக நாயகர்களும் சித்தரின் புத்திசாலித்தனத்தைக் கண்டு வாழ்த்தி விடை பெற்றனர்.

சித்தர்களால் கோள்களையே ஆட்டிப்படைக்க முடியும்; மாற்றியமைக்க முடியும்; என்பதற்கு இக்கதை ஓர் எடுத்துக் காட்டாகும். தற்காலத்தில் இத்தகைய வல்லமை எமக்கு இல்லாவிடினும் நவக்கிரகங்களால் ஏற்படும் பாதிப்புக்களைக் கண்டறிந்து அவற்றிற்குச் சாந்தி, பிராயச்சித்தம் செய்வதன் மூலம் நிவாரணம் காண முயற்சிக்கலாம் அல்லவா?

## 6.02 நட்சத்திரங்களும் அதிதேவதைகளும்

| | நட்சத்திரம் | - | அதிதேவதை |
|---|---|---|---|
| 1. | அசுவினி | - | சரசுவதி |
| 2. | பரணி | - | துர்க்கை |
| 3. | கார்த்திகை | - | அக்கினி / சூரியன் |
| 4. | ரோகிணி | - | பிரம்மா |
| 5. | மிருகசீரிடம் | - | சந்திரன் |
| 6. | திருவாதிரை | - | சிவபெருமான் |
| 7. | புனர்பூசம் | - | அதிதி |
| 8. | பூசம் | - | குருபகவான் |
| 9. | ஆயிலியம் | - | ஆதிசேஷன் |
| 10. | மகம் | - | சுக்கிரன் |
| 11. | பூரம் | - | பார்வதி |
| 12. | உத்தரம் | - | சூரியன் |
| 13. | அத்தம் | - | ஐயப்பன் |
| 14. | சித்திரை | - | விஸ்வகர்மா |
| 15. | சுவாதி | - | வாயுபகவான் |
| 16. | விசாகம் | - | முருகப்பெருமான் |
| 17. | அனுஷம் | - | இலட்சுமி |
| 18. | கேட்டை | - | இந்திரன் |
| 19. | மூலம் | - | காளி, ஐயனார் |
| 20. | பூராடம் | - | வருணன் |
| 21. | உத்தராடம் | - | கணபதி |
| 22. | திருவோணம் | - | விஷ்ணு |
| 23. | அவிட்டம் | - | வாசுதேவர் |
| 24. | சதயம் | - | எமன் |
| 25. | பூரட்டாதி | - | குபேரன் |
| 26. | உத்தரட்டாதி | - | காமதேனு |
| 27. | ரேவதி | - | சனீஸ்வரன் |

ஒருவர் தனது நட்சத்திர அதிதேவதையை வழிபட்டு வருவதன் மூலம் நன்மை அடையலாம்.

## 6.03 கிரகங்களும் அதிதேவதைகளும்

இதுபற்றி பகுதி II இல் 2.02 இல் ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது. வேறுசில நூல்களின்படி கிரக அதிதேவதைகள் வருமாறு

| | கிரகம் | | அதிதேவதை |
|---|---|---|---|
| 1. | சூரியன் | - | சிவபெருமான் |
| 2. | சந்திரன் | - | அம்பாள்/பார்வதி |
| 3. | செவ்வாய் | - | முருகன் |
| 4. | புதன் | - | விஷ்ணு |
| 5. | வியாழன் | - | தட்சணாமூர்த்தி |
| 6. | வெள்ளி | - | துர்க்கை / லக்ஷ்மி |
| 7. | சனி | - | யமன் |
| 8. | இராகு | - | பத்திரகாளி<br>துர்க்கை |
| 9. | கேது | - | துர்க்கை<br>இந்திரன்<br>கணேசர் |

எனவே, ஒருவரின் ஜாதகம் அல்லது திசாபுத்தி யில் சூரியனால் ஏற்படும் துன்பங்களுக்கு சிவபெரு மானை வழிபடுவதும் ஞாயிற்றுக்கிழமைகளில் விரத மிருப்பதும் நன்மைபயக்கும். ஆயுள் குறைவுள்ளவர் கள் திங்கட்கிழமை தோறும் சிவபெருமானைக் குறித்து விரதமிருந்து வழிபட்டுவரல் வேண்டும்.

சந்திரனால் ஏற்படும் துன்பங்களுக்கு அம்பாளை வழிபட்டு வருதல் மூலம் பயனடையலாம்.

செவ்வாய்க் குற்றங்களுக்கு முருகனை வழிபடுவதனாலும், புதனால் ஏற்படும் பாதிப்புகளுக்கு விஷ்ணுவை வழிபடுதலாலும் நன்மையடையலாம்.

வியாழசுகமின்மைக்கு வியாழக்கிழமை தோறும் தட்சணா மூர்த்தியை வழிபட்டு நன்மை பெறலாம்.

வெள்ளியால் ஏற்படும் பாதிப்புகளுக்கு இலக்குமியை வழிபட வேண்டும்.

சனிபகவானால் ஏற்படும் கஷ்டங்களுக்கு அந்த சனிபகவானுக்கே சனிக்கிழமை தோறும் எள்ளெண்ணெய் எரித்து வழிபடுவதாலும், ஆஞ்சநேயரை வழிபடுவதாலும் நன்மை பெறலாம்.

இராகு, கேதுக்களால் ஏற்படும் கஷ்டங்களுக்கு செவ்வாய்க்கிழமைகளில் இராகு காலத்தில் துர்க்கையை வழிபடுவதன் மூலம் நிவர்த்தி பெறலாம்.

மேலும் நவக்கிரக வழிபாடு, தலயாத்திரை என்பவற்றின் மூலமும் நன்மை பயக்கும்.

## 6.04 நவக்கிரக சாந்தி

சாந்தி என்றால் சாந்தப்படுத்துதல் என்று பொருள். நவக்கிரகங்களைச் சாந்தப்படுத்துவதன் மூலம் அவற்றினால் ஏற்படும் பாதிப்புகளைக் குறைக்க முடியும் அல்லது பாதிப்புகளிலிருந்து விடுபட

முடியும். இந்த உண்மையை உணர்ந்தே பெரும் பாலான ஆலயங்களில் நவக்கிரகங்களுக்கென்று தனிக் கோவில்கள் அமைத்துள்ளனர். பயபக்தியுடன் நவக்கிரகங்களை 108 தடவை வலம் வந்து வழி படுவர்.

அது மட்டுமன்றி நவக்கிரகங்களைத் திருப்திப் படுத்தி அவற்றினால் பாதிப்புகள் ஏற்படாதிருக்கவும் (Preventive) பாதிப்புக்குள்ளான நிலையில் அவற்றி லிருந்து விடுபடவும் (Curative) ஆலயங்களிலும், வீடுகளிலும் நவக்கிரக சாந்தி செய்யும் வழக்கம் இன்று வரை காணப்படுகிறது. முக்கியமாக, ஆலயங் களில் கும்பாபிஷேகம் போன்ற பெருவிழாக்களின் ஆரம்பத்தில் நவக்கிரகங்களால் பாதிப்புகள் ஏற்படா திருக்கும் பொருட்டு நவக்கிரக சாந்தி - ஹோமம் செய்யப்படுவது வழக்கமாகவுள்ளது. அவ்விதமே வீடுகளில் குழந்தைகளின் பிறந்த நட்சத்திரத்தன்றும், திருமணம், புதுமனை புகுதல் போன்ற பல்வேறு நிகழ்வுகளின் போதும் நவக்கிரகங்களைத் திருப்திப் படுத்துமுகமாக நவக்கிரக சாந்தி - ஹோமம் செய் யும் வழக்கம் காணப்படுகிறது. மேலும், துன்பம், கஷ்டம், நோய் முதலியவற்றால் பாதிப்புக்கள் ஏற்படும் போது அவற்றிற்குப் பரிகாரமாக நவக்கிரக சாந்தி - ஹோமம் செய்வர்.

நவக்கிரக சாந்தி - ஹோமத்தின்போது நவக்கிர கங்களுக்கும் அவற்றின் அதிதேவதைகளுக்கும் பூஜை செய்து அவற்றிற்குரிய நைவேத்தியங்கள் சமர்ப்பித்து வழிபடப்படும். நவக்கிரகங்களுக்குரிய சமித்துக்கள்,

பூக்கள், தூப தீபங்கள், தானியங்கள் முதலியன இப்பூஜையில் பயன்படுத்தப்படும். (இவற்றின் விபரத்தை பகுதி II இல் பார்க்கவும்) இவை ஒவ்வொன்றுக்கும் மருத்துவ குணங்கள் உண்டு.

நவக்கிரக ஹோமத்தில் சமித்துக்களாக எருக்கு, பலாசு, கருங்காலி, நாயுருவி, அரசு, அத்தி, வன்னி, அறுகு, தர்ப்பை என்பன இடம் பெறுகின்றன. இவற்றைக் கொண்டு காயத்திரீ ஹோமமும் (வேறாகச்) செய்வது பற்றி சாஸ்திர நூல்களில் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக நாயுருவி, அத்தி சமித்துக்களைக் கொண்டு 1008 காயத்ரீ ஹோமம் செய்தால் காக்கை வலி குணமாகும் என்றும், அதேபோல் அத்தி சமித்தைக் கொண்டு 1008 காயத்ரீ ஹோமம் செய்தால் பைத்தியம், மேகரோகம் நீங்கும் என்றும், ஆயுள் அதிகரிக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. இங்கு ஹோமப்புகை சிறந்த அவுடதமாக (நசிய சிகிச்சையாக) பயன்படுகிறது. இவைபற்றி விரித்தெழுதுதல் சாத்தியமற்றதாயுள்ளது.

## 6.05 நாக சாந்தி

இது ஜாதகத்தில் ராகு, கேதுவால் பாதிப்பேற்பட்டு, நாக தோஷம் ஏற்பட்டு குழந்தைப் பேறில்லாதவர்களுக்கு அத்தோஷத்துக்குப் பரிகாரங் காணும் பொருட்டு செய்யப்படுகிறது.

நாகதோஷத்துக்குப் பரிகாரமாக ஆலயங்களில் நாகப்பிரதிஷ்டை செய்தல், சந்தான கோபாலர் பிரதிஷ்டை செய்தல் போன்ற பரிகார முறைகளும் உள.

# நலம் தரும் நவக்ரஹங்கள்



புதன்
திருவெண்காடு



சுக்கிரன்
கஞ்சனூர்



சந்திரன்
திங்களூர்



குரு
ஆலங்குடி



சூரியன்
சூரியனார் கோவில்



செவ்வாய்
வைத்தீஸ்வரன் கோயில்



கேது
கீழ்ப்பெரும்பள்ளம்



சனி
திருநள்ளாறு



இராகு
திருநாகேஸ்வரம்

## 7. முடிவுரை

ஒருவர் ஆரோக்கியமாக வாழ்வதற்கும், நோய் களால் பீடிக்கப்படுவதற்கும் கிரகங்களும் காரண மாகவுள்ளன. எனவே, உடல் நோய்களுக்கு அவுட தங்கள் மூலம் பரிகாரங்காணும் அதே வேளையில் கிரகக் கோளாறுகளுக்கும் தக்கபரிகார முறை களைச் செய்வதன் மூலம் பூரணமான நிவாரணம் பெறமுடியும். சில சந்தர்ப்பங்களில் மருத்துவரீதியான பரிசோதனைகளில் ஒருவருக்கு எவ்விதமான உடற் கோளாறுகளும் காணப்படுவதில்லை (உதாரணமாக குழந்தையின்மையால் பாதிக்கப்பட்ட சிலரில் அது தொடர்பான பரிசோதனைகளில் மலட்டுத் தன் மைக்கான எவ்வித சான்றுகளும் இருப்பதில்லை) அத்தகைய சந்தர்ப்பங்களில் ஜோதிடரீதியிலான பரி காரங்கள் நன்மை பயப்பனவாக உள்ளமை குறிப் பிடத்தக்கது.

இந்நூலில் மருத்துவத்துக்கும் சோதிடத்துக் கும் இடையிலான தொடர்புகள் பல்வேறு தலைப் புகளின் கீழ் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. அவற்றையும் மருத்துவ, சோதிட நூல்களையும் நன்கு ஆராய்ந்து கடைப்பிடிப்பதன் மூலம் யாவரும் ஆரோக்கிய வாழ்வு வாழ முடியும்.

## உதவிய நூல்கள்


1. அகத்தியர் சில்லறைக்கோவை
2. அம்மணீயம்
3. கிருஷ்ணமூர்த்தி ஜோதிட பத்ததி விளக்கம்
4. குடும்ப ஜோதிடம்
5. குணபாடம் - தாதுவகுப்பு
6. சந்தான தீபிகை
7. சாத்திரி
8. சாம்பசிவம்பிள்ளை அகராதி
9. சித்த மருத்துவம்
10. சித்த மருத்துவ மூலதத்துவம்
11. சித்த மருத்துவாங்கச் சுருக்கம்
12. செகராச சேகர வைத்தியம்
13. செகராஜ சேகர மாலை
14. சோதிட ஆசான்
15. சோதிட சில்லறைக்கோவை
16. தேரையர் கரிசல்
17. தேரையர் யமக வெண்பா
18. நாடி தர்ப்பணம்
19. பதினெண் சித்தர் நாடி சாத்திரம்
20. புலிப்பாணி வைத்தியம் - 500
21. விதான மாலை
22. ஸாராவளி


**குறிப்பு:** *அட்டையில்* **அனகேதம், அன்னாகதம்** *என்றிருப்பதை அநாகதம் எனத் திருத்தம் செய்க.*

# ஆசிரியரின் நூல்கள்

1. ஈழத்துச் சித்தமருத்துவ நூல்கள் ஓர் அறிமுகம் *(அரச சாகித்திய மண்டலப்பரிசு. கொழும்பு தமிழ்ச்சங்கப் பரிசு பெற்ற நூல்)*
2. சுதேச மருத்துவ மூலிகைக் கையகராதி *(அரச கரும மொழித்திணைக்களப் பரிசு பெற்ற நூல்)*
3. உள நெருக்கீடுகளும் மனநலனும்
4. கட்டு வைத்தியம்
5. இருபதாம் நூற்றாண்டில் ஈழத்துச் சித்த மருத்துவம்
6. பிள்ளைப் பிணிமருத்துவம் - கைநூல்
7. சித்த மருந்தியலும் மருந்தாக்கவியலும்
8. சித்த மருத்துவ மூல தத்துவம் *(வட கிழக்கு மாகாணசபையின் உயர்கல்விக் கான விருது பெற்ற நூல்)*
9. யாழ்ப்பாண மக்களின் சைவ உணவுப்பழக்க வழக்கங்கள்
10. மூலிகைகள் ஓர் அறிமுகம்
11. மூலிகை உணவு மருத்துவம்
12. யோகாசனமும் உடல் நலமும்
13. Common Drugs in Siddha Pediatrics
14. இந்து ஆலயங்களில் மருத்துவ சுகாதாரம்
15. மருத்துவமும் சோதிடமும்.

